குருவடி சரணம்!

# ஞானியின்

# கல்



சுவாமி பிரபஞ்சநாதன்

# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | ஞானியின் கல் |
| ஆசிரியர் | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | தன்னாட்டம் |
| முதற்பதிப்பு | : | 2020 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 97 |
| தாள் | : | A5 (5.83" X 8.27") |
| எழுத்து அளவு | : | 12 புள்ளிகள் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| கட்டமைப்பு | : | சாதாபைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| விலை | : | 300/- |

# என்னுரை

பெருமைமிகு சித்த வைத்தியத்தை சிறப்பாகச் செய்யும் சித்தர் பெருமக்களுக்கு, அடியேனின் அன்பு கலந்த, தாழ்மையான வணக்கங்கள்!

கடந்த 2009 ஆம் ஆண்டு முதல் 2011 ஆம் ஆண்டு வரை, சித்த வைத்தியத்தை கோவை மாவட்டம், செல்வபுரம் பகுதியில் உள்ள '**மனோன்மணி சித்த வைத்தியசாலை**' நிறுவனர், சித்த வைத்தியர் திரு. குருநாதன். ஐயா அவர்களிடம், கோவை பேரூர் ஸ்ரீ பட்டீஸ்வரன் திருக்கோவில் அருகே அமைந்துள்ள, திருவாவடுதுறை ஆதினத்திற்குச் சொந்தமான ஒரு ஆன்மீகப் பாடசாலையில், வாராந்திர வகுப்புகளாக, ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையன்று நடைப்பெறும் வகுப்புகளிலும் கலந்துக் கொண்டு, இந்த சித்த மருத்துவத்தை அடியேன் பயின்று முடித்தேன். அதன் பின்பு, தற்பொழுது, பொள்ளாச்சியில் பல வருடங்களாக சித்த மருத்துவத்தை மிகச் சிறப்பாகச் செய்து வருகின்றேன்.

இதில், கிடைத்தற்கரிய மானிடத்தேகத்தை பெற்றதின் பெருமையை பற்றி அறிந்துக் கொண்ட அடியேன், அதன் பயனாக, மக்களுக்கு மருத்துவத்தை சேவையாகச் செய்துக் கொண்டே இருக்கிறேன்.

அத்துடன், இந்த மகத்தான மனித உடலைக்கொண்டு, உடம்பினுள் உத்தமனைக் காண்! என்ற ஔவைப் பாட்டியின் உபதேசத்தினை அப்படியே சிரமேற்கொண்டு, மேன்மக்களாகிய பல்வேறு மெய்யன்பர்களையும், குருமார்களையும் கண்டு, அவர்களில் ஒருவராக, பொள்ளாச்சி ஆனைமலையில் உள்ள

சுவாமி பூஜ்ய ஸ்ரீ ததேவானந்த சரஸ்வதி அவர்களின் வழிகாட்டுதலின்படி, அவர் உபதேசித்த உபநிஷதங்கள், பகவத்கீதை போன்ற வேதாந்த சாஸ்திரங்களைக் கற்று, அவர் கூறிய ஆன்ம ஞானப்பாதையில், அடியேனின் பயணத்தைத் தொடங்கி, அதற்கான ஆயத்தமாக '**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்**' என்ற திருமூலரின் திருமந்திரத்தை திடமாகக் கொண்டு, மகத்தான இந்த சாஸ்திர விசயங்களைப் பல்வேறு ஆன்ம ஞான நூல்களாக, எளிய தமிழ் மொழியில், இன்றைய இளைய தலைமுறைகளுக்கு கொண்டு சேர்க்கும் நல் நோக்கத்தில், எண்ணற்ற வேதாந்த நூல்களை, (https://archive.org/details/@swami_prapanjanathan) இணையதளத்தின் மூலமாக கொண்டு சேர்க்கின்ற எளிமையான பணியினை இனிதே செய்து வரப்படுகின்றது.

அந்த வழியிலே, அடியேன் கற்ற இந்த மகத்தான சித்த மருத்துவத்தின் சிறப்பினையும், இணையத்தின் வாயிலாகவே, '**நம் நலம்**' என்ற (http://namnalam.blogspot.com/) பிளாக் மூலமாக பலருக்கும் கொண்டு சேர்க்கின்ற செயலை, ஈஸ்வரக் காரியமாகவே செய்து, அவைகளை அந்த ஈஸ்வரனுக்கே சமர்ப்பணம் செய்யப் படுகின்றது.

இதில், என் செயலாவது ஒன்றுமில்லை! எல்லாம் அவன் செயலே! என்ற மணிவாசகப் பெருமானின் பெருந்தன்மையைக் கருத்தில் கொண்டு, கற்றதின் பயனாக, அந்த வாலறிவன் நற்றாள் தொழுதுக்கொண்டே, வந்த வேலையை மட்டும் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

நன்றி! என்றும் அன்புடன்,

சுவாமி பிரபஞ்சநாதன்.

# ஞானியின் கல்

## 1. மறைபொருளும், சாகாக்கலையும்

மனிதனின் வாழ்க்கையே மறைப்பொருளை அறிவதற்கு உண்டான ஒரு உன்னதமானப் பயணம் எனலாம். ஒவ்வொரு மனிதனும் பிறக்கும்போதே அவன் அடையக்கூடிய இறுதி இலக்கையும் தீர்மானிக்கப்பட்டு, அதன் அடைப்படையிலே தான் அவனது வாழ்க்கைப் பயணமும் அமைகின்றது.

அடுத்து என்ன நடக்கப்போகின்றது என்பதை அறிய முடியாத, சுவாரஸ்யமான அவனது வாழ்க்கை, அனுதினமும் ஆனந்தமாகக் கழிகின்றது. இதிலே, மரணம், மரணத்துக்குப் பிந்தைய வாழ்க்கை பற்றிய பயம்தான் மனிதர்களை ஓரளவு நியாயமாகவும் வாழச் செய்கிறது.

கடவுளைப் பற்றிய தேடலும் அவனிடம் உருவாகிறது. அத்துடன் ஞானத்தை தேடி, அதை அடைய விரும்பிய எல்லாவிதமான பயணங்களும், அதன் பாதைகளும் பயணிக்கு அர்த்தமுள்ளவைகளே ஆகும்.

இந்தப்பயணத்திலே மனிதனின் பிறவிப் பிணியைத் தீர்க்கும் மருந்தை கண்டுபிடித்து விட்டான் என்றால், இவனது

பயண நோக்கம் முழுவதுமாக நிறைவடைந்தது எனவும் அறியலாம். இந்த பயணத்தின் நோக்கம் வெற்றிப் பெற வேண்டுமானால், அதற்குச் சாதனமான இந்த உடலும், மனமும் ஒருங்கிணைந்து ஒத்துழைக்க வேண்டும் என்பதை நம் தமிழ் சித்தர் பெருமக்கள் அறிந்திருந்தனர்.

அவ்வாறே, இந்த ஸ்தூல உடலையும், சூக்ஷும மனதையும் ஒருங்கிணைக்கின்ற ஒரு உன்னதப் பொருள் கண்களால் காணப்பட முடியாத உயிராக உள்ளது என்பதையும் அவர்கள் அறிந்திருந்தனர்.

அந்த அரூபமான கண்களுக்குத் தெரியாத உயிர் என்றுமே அழியாமல் இருக்கக் கூடியது. ஆனால், கண்களுக்குத் தெரிகின்ற இந்த உடலோ தொடர்ந்து மாறுதலுக்கு உட்பட்டு, ஒரு நாள் அழிந்து போகக் கூடியது.

அதாவது, இந்த உடல் அழிவுக்கு உட்படுவது என்பதைக்கூட, வேறு ஒன்றாய் மாறக்கூடியது என்றே சித்தர்கள் அறிந்திருந்தனர். அதாவது, இறந்த இந்த உடல் மண்ணில் உள்ள நுண்கிருமிகளினால் சிதைக்கப்பட்டு மற்ற புழு, பூச்சிகளுக்கும், தாவரங்களுக்கும் உணவாக மாறுகின்றது என்பதையும் அவர்கள் நன்கு அறிந்திருந்தனர்.

அந்த சிதைந்த அழுகிய நிலையில் உள்ள உடலை உணவாக உட்கொள்கின்ற புழு, பூச்சிகள் மற்றும் தாவரங்கள் போன்றவைகளை தவளை, ஓணான், பாம்பு, பறவைகள், விலங்குகள் போன்றவைகள் ஒன்றை ஒன்று உணவாக உட்

கொள்கின்றன. இவைகள் அனைத்தையும் இந்த மனிதர்கள் உணவாக உட்கொள்கின்றனர்.

இவ்வாறு, ஒன்றை ஒன்று உணவாக உட்கொள்ளப் படுவதும், ஒன்றை ஒன்றுச் சார்ந்து வாழ்க்கையை வாழ்வதும் என இந்த மொத்த பிரபஞ்சமே ஒரு சக்கரம் போன்று சுழன்றுக்கொண்டு உள்ளது.

உண்மையிலேயே, இதை சற்று ஆழ்ந்து ஆராயும் பொழுது, உணவு என்று தனியாக வெளியில் இருந்து எதுவே கிடையாது. அதாவது தன்னுடைய உடலையே தானே உணவாக உட்கொள்ளும் ஒருமுறைதான் நடைமுறையில் நம்மிடையேக் காணப்படுகின்றது.



அதிலே, இந்த எறும்பு முதல் ஏணைய அனைத்து உயிர்களும் ஒன்றை ஒன்று உணவாக உட்கொள்ளப்படுகின்ற ஒரு உணவு சக்கரம் என்ற சுழற்சி மட்டுமே, இந்த புவியில்

உண்மையில் நடைமுறையில் இருக்கின்றது. அதனால்தான் இந்த பூமியும் தன்னைத்தானே சுற்றிக் கொண்டிருக்கின்றது.

அத்தகைய உணவுச் சக்கரத்தில் ஒரு சாதாரண சிறு எறும்பு முதற்கொண்டு, மிகப்பெரிய யானை வரை எல்லாமே உணவைத்தேடி மட்டுமே ஓயாமல் ஓடுகின்றன. உணவு உண்டதும், வயிற்றுப் பசியாற்றிக் கொண்டு, அவைகள் திருப்தியாக ஓய்வு எடுத்துக்கொள்கின்றன.

ஆனால், இந்த மனிதன் மட்டுமே உணவு உண்டும் திருப்தி உண்டாகாமல், இன்னும் வேண்டும் என்று அடுத்த வேளைக்கு சேமிக்க ஆரம்பிக்கின்றான். அதற்காகப் பல்வேறு அழிவுப் பாதைகளை நோக்கி, அறியாமைப் பயணத்தின் வாயிலாக, அனேக அரிதான சீவர்களை, இன்று நம்மிடையே இல்லாமல் முழுவதுமாக அழித்தும் விட்டான்.

இந்தச் செயல்கள் எல்லாமே இவனது சுயநலத்தினால் என்பதினால், இவனைவிட வலிமையில் குறைவான மற்ற சீவர்களின் உணவையும், இவனே அபகரித்து உட்கொண்டு, பல்வேறு உடல் நோய்களுக்கும் ஆளாகின்றான்.

இவ்வாறு, இந்த உணவுச் சக்கரத்தில் மனிதன் தன் ஆதிக்கத்தை செலுத்தி, அதிக உணவு உற்பத்தியை உண்டாக்க ஆசைப்பட்டு, அனேக விளை நிலங்களில் வீணாகப் பல இரசாயனப் பூச்சிக்கொல்லி மருந்துகளையும், பல்வேறு செடி, கொடிகளான மருத்துவ மூலிகைகளை அழிக்கும் களைக் கொல்லி இரசாயன மருந்துகளையும், உரங்களையும் மண்ணில்

இடும்பொழுது, அதனால், மண் வளம் பெரிதும் பாதிக்கப் பட்டு, மனிதன் முதற்கொண்டு, மற்ற உயிரினங்களுக்கு உணவு கிடைக்காமல், அவைகள் தங்களுடைய உயிரை மாய்த்துக் கொள்வதற்கு இந்த மனிதனே காரணமாகவும் இருக்கின்றான்.

மகத்தான இந்த மனிதப்பிறவியின் உயர்வை அறியாத உதவாக்கரை மனிதர்கள் பலரும், இவ்வாறு மற்ற சீவர்களின் வாழ்வாதாரமான உணவுச்சங்கிலியை உடைப்பதினால், உயிரின் உன்னதத்தை அறிய முடியாமல் இருக்கின்றான்.

இவ்வாறு சிதைக்கப்பட்ட உணவுச் சங்கிலியான உயிர்ச் சங்கிலியை மனிதன் அறுக்கும் பொழுது, அது அவனது ஆருயிருக்கும், ஊறு விளைவிக்கும் என்ற அடைப்படை உண்மையைக்கூட அறிய முடியாத அளவிற்கு, அதிக ஆசைகளில் அலை மோதுகின்றான்.

உன்னதமான உயிர் சக்தி இந்த உடலில் நெடுங்காலம் நீடித்து இருக்க வேண்டுமாயின், அதற்கு எப்பொழுதும் மனிதன் மனதிலே மகிழ்ச்சி மலர வேண்டும் என்பதை, அன்றைய சித்தர் பெரு மக்கள் நன்கு அறிந்துக் கொண்டு, அதற்கான முதல்படியாக மற்ற சீவர்களையும் மகிழ்ச்சியுடன் அன்பு செலுத்தி, அவைகளை அரவணைத்து, துன்பம் விளைவிக்காத தூய வாழ்க்கையை வாழக்கற்றுக் கொடுத்தனர்.

பொதுவாக, இந்த பிரபஞ்சத்தில், நாம் வசிக்கும் இந்த பூமியைப் போன்றே, பல்வேறு வடிவங்களில் காணப்படுகின்ற

மற்ற கோள்கள், விண்மீன்களைத்தவிர, மீதமுள்ள எல்லாப் பகுதிகளையும் '**வெட்டவெளி**' என்கின்றோம்.

இந்த வெட்டவெளி என்பது ஒன்றுமில்லாததாகத் தோன்றினாலும், தனக்குள்ளே அனைத்து சீவர்களுக்கும், உடல் அமைவதற்கு ஆதாரமாக உள்ள அடிப்படைப் பொருளை (மெய்ப்பொருளை) அரூப நிலையில் கொண்டுள்ளது.

பொதுவாக வெட்டவெளி என்பதே நம் சாதாரண கண்களுக்குத் தெரியாத அரூபமானது. அதில் காணப்படுகின்ற பல் வேறு கண்களுக்குத் தெரிகின்ற உடல்களுக்கு உள்ளே உள்ள உயிரும் அரூபமானது.

இவ்வாறு, இந்த வெளிக்கும், உயிருக்கும் உள்ள தொடர்பை உடல்தான் தற்காலிகமாகப் பிரிக்கிறது.

அதாவது, இருவருக்கு இடையில் உள்ள வெளியை '**இடைவெளி**' என்பதுப் போன்று, இந்த தனித்த உடலுக்கும், மொத்த பிரபஞ்சத்திற்கும் இடையில் உள்ள வெளியை "**வெட்டவெளி**" என்கின்றோம்.

காலத்தைக் கடந்து நிற்பதுதான் '**வெட்டவெளி**' எனக் கூறப்படுகிறது. இந்த வெட்டவெளியே ஆன்மாவாகும்.

அந்த ஆன்மாவில் இரண்டறக் கலந்து நிற்கின்ற எல்லா உயிர்களும் உண்மையில் வெட்டவெளியில்தான் ஒன்றாகக் கலந்து நிற்கின்றன. அதாவது, அண்டத்தில் உள்ளதை, பிண்டத்தில் கொண்டுள்ளன.

அவ்வாறு, அந்த ஆத்மாவாய் விளங்கும் வெட்டவெளி **அண்டத்தில் பரமாத்மாவாய்** விளங்குகிறது என்றால், அதுவே, **பிண்டத்தில் உயிராய்** வெளிப்பட்டு நிற்கின்றது.

எனவே, இந்த தனித்த உடலையும், மொத்த பிரபஞ்ச உடலையும், ஒன்றாக இந்த வெட்டவெளியில் வெளிப்படுத்தும் அந்த மெய்ப்பொருள் பற்றிய மெய்யான ஆராய்ச்சிகளை மேற்கொண்ட நம்முடைய சித்தர் பெருமக்கள் உயிருக்கும், உடலுக்கும் உரிய உன்னத தொடர்பை ஆராய்ந்து, இந்த உடலை இன்னும் பல காலம் இந்த உயிருடன் பூமியில் நிலைத்து நிற்கச் செய்ய முடியுமா? என ஆராய்ந்து, அறிந்துக் கொண்டனர்.

அதில், அவர்கள் அறிந்த அரிய உண்மையை, பஞ்ச பூதங்களில் ஒன்று எனவும் கண்டறிந்தனர்.

அவ்வாறு பயன்படும் அந்த மெய்ப்பொருள் பஞ்ச பூதங்களைப் பிரிக்கவும், அத்துடன் தன்னில் தானாய் தனித்து இயங்கக் கூடியதுமான அது ஒன்றுமட்டுமே, எல்லா சீவர்களின் உடல்களுக்கும் ஆதாரமான உயிர் கொடுக்கும் பொருள் என்பதையும், அதுவே வெட்டவெளி எங்கும் பரவிக்கிடக்கிறது என்பதையும் சித்தர்கள் கண்டறிந்தனர்.

இப்படி ஒரு வழி முறையை அறிந்த திருமூலர் போன்ற அனேக சித்தர்கள், அந்த மெய்ப்பொருள் உதவியால் மெய்ஞ் ஞானிகளாகப் பல நூறு ஆண்டுகள் வரை, இந்த உடலோடு வாழ்ந்ததும், அதன் பின் என்றுமே அழியாத ஆன்மாவாக, இந்த வெட்டவெளியாகவே இவர்கள் நிலைத்து நிற்பதுவும் நமக்கு உணர்த்தும் உண்மைகள் எனலாம்.

இவ்வாறு, இன்றளவும் நம்மால் அறிய முடியாத அளவிற்கு, அந்த சித்தர் பெருமக்கள் பலரும், இன்றுகூட இந்த உடலோடு, நம்மோடு இருந்து வருகின்றனர். இவர்களது தோற்றத்தைக் கொண்டு, இவர்களது வயதை நாம் அறிய முடியாது. காரணம், இவர்கள் எந்த வயதில் அந்த மெய்ப் பொருள் இரகசியத்தை சூக்ஷுமமாக அறிந்துக் கொண்டு, அதை ஸ்தூலத்தில் அனுபவமாக உணர்ந்துக் கொண்டனரோ, அதனையே, அவரகள் இங்கு மருந்து முடித்து உட்கொண்டு, அனேக காலம் இந்த உடலோடு வாழ்ந்தும் வருகின்றனர்.

அந்த மெய்ப்பொருளை அனைத்து பாமர மக்களும், அறியாமலேயே அதை வணங்கி வருவதையும் கண்கூடாகக் கண்டனர். ஆனால், அந்த சித்தர் பெருமக்களோ, அந்த அரிதான மெய்ப்பொருளைக் கொண்டு, குரு மருந்து முடித்து, இதனைக் கொண்டு அனைத்து நோய்களுக்கும் தீர்வையும் கண்டனர்.

அத்துடன், அவர்களும் அந்த குரு மருந்தைக் கொண்டு, முப்பு முடித்து, உடலைக் கற்ப தேகமாக மாற்றிக் கொண்டனர். அவர்கள் எந்த வயதில் கற்ப மருந்தை எடுத்தனரோ, அதே வயதில் அப்படியே இருந்துக் கொண்டு இருக்கின்றனர்.

இவ்வாறு, இவர்கள் முப்பு முடித்து, அதனை உணவாக உட்கொண்ட பிறகு, அவர்களுக்கு ‘**மூப்பு**’ என்கின்ற வயதான தோற்றம் இனி உண்டாகாது. அந்த வயதில் அப்படியே பல காலம் இந்த ஸ்தூல உடலுடன் வாழ்ந்து வருகின்றனர்.

அப்படி கற்பம் முடித்து, தேகத்தை காயகற்பம் செய்த சித்தர் பெருமக்களையே, சித்த வைத்தியார்கள் முதற்கொண்டு அனைவரும் '**முப்பு**' முடித்த முனிவர்கள் என்கின்றனர்.

சித்தர்களைப் பொறுத்த வரையிலும் இந்த உடலோடு நீண்ட நெடுகாலம் வாழ்ந்துக்கொண்டு, பல்வேறு துறைகளில் ஞானத்தை அடைந்து, அவைகளை மனித சமுதாயத்திற்கு பயன்படும் வகைகளில், **சித்த மருத்துவம், தொடு வர்மம், வானவியல் சாஸ்திரம், மனோவியல், பல்லுயிரியம், இரசவாதம், மெய்ஞ்ஞானம், சாகாக்கல்வி** போன்றவைகளை மனிதர்களுக்கு கொடுத்து, என்றும் அழியாத அமரத்துவம் பெற்று, இறவாப் பெரு நிலையை பெற்றவர்கள் எனலாம்.

பிறந்தது அனைத்துமே அழிவதில்லை. அவைகள் மாற்றத்திற்கு மட்டுமே உட்படுகின்றது என்ற பேருண்மையை இந்த உலகத்திற்கு உணர்த்தியவர்கள் நம் சித்தர் பெருமக்கள்.

என்றாவது ஒரு நாள் இவர்களும் இந்த உடலை, மாற்றத்திற்கு உட்படுத்தும் விதமாக, அதனை விட்டுத்தான் ஆக வேண்டும் என்றாலும், அழியாத ஆன்ம அனுபவத்தைக் கொண்டு, என்றென்றும் வெட்டவெளியில் திளைத்திருப்பதை, இந்த ஸ்தூல உடல் கொண்டு வாழும் பொழுதே, அனுபூதியாக அடைந்தவர்கள் நம் சித்தர் பெருமக்கள் எனலாம்.

அவர்களது பஞ்சபூத பரு உடலை இந்த மண்ணிற்குள் புதைத்தாலும், அது அழுகாத நிலையில் அப்படியே பல நூற்றாண்டுகள் இருக்கும். இதற்குக் காரணம் என்னவெனில், இவர்களது இரசவாத செய்முறையில், இவர்கள் அறிந்த ஸ்தூல

மெய்ப்பொருளைக் கொண்டு, நெருப்பில் வேதித்து செய்த, பஞ்சபூதங்களில் ஒன்றான "**ஞானிகளின் கல்**" என்ற அற்புதமான '**குரு மருந்து**' ஒன்றே ஆகும்.

மேலும், அந்த மெய்ப்பொருள் கொண்டு செய்யப்பட்ட '**குரு மருந்து**' என்கின்ற கற்ப மருந்து, அவர்களது உடலையும், உயிராற்றலையும் நீண்ட காலம் அழியாமல் பாதுகாக்கின்றது.

நாம் அறிந்த இன்றைய நவீன விஞ்ஞான அறிவியல் ஆராய்ச்சிகள் எல்லாம் இவர்களின் அன்றைய மெய்ஞ்ஞான ஆராய்ச்சியின் முன்பு மண்டியிட வேண்டும் எனலாம்.

மனித உடலோடு ஒருவன் நீண்ட காலம் வாழ முடியும், வாழ்ந்தும் இருக்கின்றனர் என்பதற்கான அனேக சான்றுகள் உள்ளன. ஆனால், அன்று வாழ்ந்த அந்த மெய்ஞ்ஞானிகளை இன்று நாம் காண முடிவதில்லையே என்று கேட்டால், அவர்களை இந்த மனித உடலோடு, மற்றவர்கள் பார்த்தாலும், அவர்களை சித்தர்கள்தான் என்று ஏற்றுக் கொள்ளக்கூடிய சித்த சுத்தி (தூய்மையான மனம்) இவர்களிடம் இல்லாததால், அவர்களை நேரில் பார்ப்பதும், பழகுவதும் என்பது, இவர்களைப் போன்ற சாதாரணமான மனம் படைத்தவர்களால் என்றுமே சாத்தியம் ஆகாது.

"**பாம்பின் கால் பாம்பறியும்**" என்பதற்கு ஏற்ப ஏனைய சித்தர்கள் மட்டுமே, இவர்களைப் போன்ற மகத்தான சித்தர் பெருமக்களின் பெருமைகளை அறிவார்கள். சாதாரணமான உலகியல் ஆசைகள் கொண்ட மற்றவர்களால், நிச்சயமாக இவர்களை அடையாளம் காண முடியாது.

இருப்பினும், சித்தர்களது **‘மரணமில்லாப் பெருவாழ்வு’** என்கின்ற **“சாகாக்கலை”** மனித உடலுக்கு மட்டுமே சாத்தியம் என்பதை இன்றைய நவீன அறிவியல், ஜீன்களின் மீதான தமது ஆராய்ச்சியைத் திருப்பி, விஞ்ஞான பூர்வமாகவே ஆயிரத்து இருநூறு ஆண்டுகாலம் வரையிலும், மனிதன் மரணத்தைத் தள்ளிப் போட முடியும் என்ற உண்மையை கூறி, இந்த மனிதப் பிறவியின் மகத்துவத்தையும் நமக்குச் சுட்டிக் காட்டுகின்றது.

ஆனால், அதை அனுபவமாக நடைமுறையில் கொண்டு வருவதில் அனேக சிக்கல்கள் அவர்களிடம் நடை முறையில் உள்ளது. அதில் தலையாய சிக்கல் என்பது, அவர்களிடம் காணமுடியாத மனத்தூய்மை என்ற **‘சித்த சுத்தி’** இல்லாத காரணத்தினால், அவர்களால் அதை சாத்தியம் ஆக்க முடியவில்லை.

அதாவது, இவர்களது மனதில் ஆசைகள் என்ற ஆயிரமாயிரம் கற்பனைகள் கலந்திருப்பதினால், இவர்களது மனம் அவைகளினால் சூழப்பட்டு பரிசுத்தமாக இல்லை என்ற காரணத்தினால், மெய்ப்பொருள் இரகசியம் இவர்களுக்குப் பிடிபடவில்லை எனலாம்.

அதுவே, அன்றைய நம் சித்தர் பெருமக்கள் இதுப்போன்ற ஜீன்கள் என எதிலும் கை வைக்காமல், **‘அகரம்’** என்கிற ஒரே ஒரு வான் பொருளைக் கொண்டு '**சாகாக் கலையை**' சாத்தியமாக்கிக் காட்டினர்.

இறப்பு என்பதில், நமது உடலுக்கும், உயிருக்கும் என்ன நிகழ்கிறது? என்பதில், இந்த சித்தர் பெருமக்கள் கூறும் கருத்து என்னவெனில், இந்த உடலையும், உயிரையும் இணைக்க உதவும், மெய்ப்பொருளின் கட்டு கலைந்த பிறகே, உயிரானது உடலில் இருந்து வெளியேறி வெட்டவெளியில் இரண்டறக் கலக்கின்றது.

ஆன்மாவாகிய உயிருக்கு மலங்கள் எனப்படுகின்ற குற்றம் என்றுமே கிடையாது, சீவர்கள் உடல் கொண்டு வாழும் போது, உண்டாக்கிக் கொண்ட அத்தனை மலங்களும், அவர்களது எண்ணங்களால் ஏற்றி வைக்கப்பட்டு, மனம் என்ற மலங்களாக (குற்றங்களாக) மாறி விடுகின்றது.

அந்த குற்றங்களை சேகரித்துக் கொண்ட சித்தமே, மீண்டும் உடல் எடுப்பதற்கான காரண உடலாக இருக்கின்றது என்கின்றனர் நம் சித்தர் பெருமக்கள்.

ஆகவே, '**மனமே குணம்**' என்றும், '**மனம் போல் வாழ்வு**' என்றும், '**மனமே உடல்**' என்றும் இவர்கள் உரைக்கின்றார்கள்.

அரூபமான உயிரையும், ரூபமான உடலையும் ஒன்றாக இணைக்கும் அந்த மெய்ப்பொருளானது, மனிதன் தன்னுடைய பரு உடலோடு பல காலங்கள் நோய்நொடிகள் ஏதுமின்றி வாழ்வதற்கான வல்லமையைக் கொண்டது.

அதுவே '**குரு மருந்து**', அதுவே, '**சாகா மருந்து**', அதுவே '**அமிர்தம்**' என்கின்றனர் நம் சித்தர் பெருமக்கள்.

அழியும் இந்த உடலை, அழியாமல் நீண்ட நெடுங் காலம் இந்தப் பூ உலகில் நிலைத்திருக்கச் செய்யக் கூடிய ஒரு பொருள், பிரபஞ்சத்தின் வெட்டவெளியில் அரூப நிலையில், அனைத்திற்கும் அடிப்படைப் பொருளாய் இருந்து வருகிறது.

நீர்நிலை, நிலம், மலை, மரம், செடி, கொடிகள், ஊர்வன, பறப்பன, விலங்குகள், மற்றும் மனிதன் என அனைத்து சீவர்களின் உயிர்ப் பொருளாக, அந்த ஆதாரப் பொருள் இந்த நில உலகின் மண்ணோடு மண்ணாகக் கலந்தும், நீரில் கலந்தும், காற்றில் கரைந்தும், நெருப்பிலும் என எல்லா வற்றிலும் தங்கு தடை இன்றி, அந்த வான் பொருளாகவே அது இருந்து வருகின்றது.

அதனால்தான், அதைப் பஞ்சபூதங்களில் ஒன்று என அழைத்தனர் நம் சித்தர் பெருமக்கள்.

இந்தப் பொருளே அனைத்து சீவர்களின் தோற்றத்திற்கு ஆதியாய் அமைந்த மெய்ப்பொருளாகும். அதனாலேயே இதற்கு **சிரஞ்சீவி** என்றும், **சாகாமூலி** என்றும் சித்தர்கள் அழைக்கிறார்கள்.

அந்த கண்ணிற்குத் தெரியாத சூக்ஷும மெய்ப் பொருளை நம் சித்தர் பெருமக்கள் இந்த பூ உலகில் சாதாரண கண்களால் காணக்கூடிய ஸ்தூலத்தில் கண்டு கொண்டனர். அதனைக் கொண்டு அனைத்து நோய்களையும் நீக்கும் “**குரு மருந்து**” என்கின்ற ‘**முப்பு**’ செய்து முடித்தனர்.

இந்த **முப்பு** என்பதே **ஞானிகளின் முதல் பொருள்** எனலாம்.

அதாவது, சாகாக்கலை என்று சித்தர் பெருமக்களாலும், ஞானிகளாலும் போற்றப்படும், ஒப்பற்றக் கல்வி முறையைக் கற்றவர்களுக்கு, மனித தேகத்தை மூப்பு என்கின்ற முதுமை வராமல், நீண்ட நெடுநாட்கள் இளமையுடன் இருக்கச் செய்யும் ஆய்வுக்கலைக்கு ஆணிவேராக உள்ள '**முப்பு**' என்கின்ற குரு மருந்து ஒன்றையே, "**பூநீர்**" என்றும், '**அண்டக்கல்**' என்றும், '**அமுரி**' என்றும் பலப் பெயர்களில் அழைக்கின்றனர்.

இந்த முப்புவுக்கு அபரிமிதமான அனைத்து சக்திகளும் இருப்பதால் இதனை **ஏகவஸ்து** என்றும் **பிரணவப் பொருள்** என்றும் சித்தர்கள் அழைக்கிறார்கள்.

இதன் அபரிமித சக்தியைப் பற்றி சித்தர் நூல்களிலும், மற்ற மேல் நாட்டு ஞானிகளின் நூல்களிலும் கூறப்பட்ட உயர்வான கருத்துக்களைப் படிக்கும்போது, இதன்மீது ஒரு ஈர்ப்பு உண்டாகி, இது குறித்த தகவல்களை அறியும் ஆவல் அனைவரிடமும் காணப்படுகின்றது.

ஆனால், இந்த சாகாக்கலையைப் பற்றி கூறுகின்ற அத்தகைய நூல்களில், இந்த மெய்ப்பொருளாகிய பிரணவப் பொருளால் கிடைக்கப்பெறும் உயரிய பலன்களைப் பற்றி மட்டுமே கூறப்பட்டு உள்ளதே தவிர, அந்த முதல் பொருளைப் பற்றிய நேரடி தகவல்களைப் பற்றி போதுமான அளவு கூறப்படவில்லை.

மேலும், அந்த சாகாக்கலைப் போன்ற நூல்களைப் படிக்கின்ற பெரும்பாலான சித்த வைத்தியர்களுக்கு, அந்த முதல் பொருளைப் பற்றிய போதுமான அறிவு இல்லாத

காரணத்தினால், அந்த நூல்களில் கூறப்பட்டுள்ள மறைபொருள் இரகசியங்களைப் பற்றிய கருத்துகளை அவர்களால் புரிந்துக் கொள்ள முடியவில்லை என்றே கூறலாம்.

அத்தகைய முதல் பொருளைப்பற்றி, அந்த நூல்களில் ஒன்றுமே கூறவில்லையா என்றால், பல தகவல்கள் கூறப்பட்டுள்ளன, ஆனால், அவைகளை அறியக்கூடிய சித்த சுத்தி இவர்களிடன் இல்லை என்றே கூறலாம்.

அதனால்தான் சித்தர்களால் பரிபாசைகளில் இந்த இரகசியத்தைக் கூற, அதேப்போன்று ஒத்தத் தன்மைக்கொண்ட கருத்துக்களை ஏராளமாக கூறியுள்ளார்கள்.

இதனால்தான், இதைப் பிரித்துப் படித்து புரிந்துக் கொள்ள முடியாமல் எல்லோருக்கும், எது உண்மையானது என்பதை அறிவதில் குழப்பம் உண்டாகின்றது.

மேலும், அந்த ஒத்தக் கருத்துகளைக் கொண்ட பிறப் பொருட்களை எடுத்துக் கொண்டு ஆய்வுகள் பல செய்தாலும், அதன் செய்முறை முடிவுகள் சித்தர் நூல்களில் கூறியபடி இருந்தாலும், அது சரியாக வேலைச் செய்கிறதா? என்றால் சந்தேகமே எனலாம்.

இத்தகைய குழப்பங்களிலிருந்து விடுபட்டு உண்மைப் பாதையை அறிய வேண்டுமானால், அதற்கான குருவை நாடிச் செல்ல வேண்டும். அத்துடன் குரு என்பவர் இருளிலிருந்து ஒளியை நோக்கி நம்மை அழைத்துச் செல்பவர். அதாவது, அறியாமையில் இருக்கும் நம்மை அறிவுப் பாதையில்

அழைத்துச் செல்பவரே குரு என்பதை அனைவரும் அவசியம் அறிய வேண்டும்.

ஆனால், இன்றைய நவீன கல்வி முறையில் குருவின் நிலையை சற்று எண்ணிப் பாருங்கள். இந்த ஆசிரியர்களை மதிக்காத இன்றைய மாணவர்கள் எங்கிருந்து உண்மையை உணர முடியும்?

ஆகவே, அன்றைய நம் மூனோர்களான சித்தர்கள் நூல்களைப் படிக்க வேண்டும். அவர்கள் கூறியபடி சிறப்பாக வாழ முற்பட வேண்டும். மற்றும் ஆசிரியர்களைப் போற்ற வேண்டும். அப்பொழுதுதான், அவர்கள் வாயிலாக மெய்ப்பொருள் இரகசியம் வெளிப்படும்.

இதிலே, இன்றைய காலத்தில் உண்மையான குருவை விட, போலி குருமார்கள் அதிகம் காணப்படுகின்றனர். அதற்குக் காரணம் அவர்களது ஆசைகள். அதாவது, '**பணம் பத்தும் செய்யும்**' என்பதற்கு ஏற்ப இன்றைய மக்களிடம் உள்ள பணத்தாசையால், அவர்களிடம் பல்வேறு தீமைகளை நாம் காண முடிகின்றது.

இவர்களது ஒட்டுமொத்த பாவச் செயல்களுக்கான விளைவுகளாக இவர்கள் எல்லோருமே, இன்றைய நவீன மருத்துவத்தின் வாயிலாக, இவர்கள் சம்பாதித்த அந்தப் பணத்தை இழக்கவும் செய்கின்றனர்.

அதாவது, தவறான முறையில் சம்பாதித்த பணம், தவறான ஒரு மருத்துவத்தில் செலவாவதைக்கூட இவர்களால் அறிய முடியவில்லை என்பதைக் காணும் பொழுது,

இவர்களின் அறியாமையை எண்ணி பரிதாபப்படுவதைத் தவிர வேறு ஒன்றும் ஒருவராலும் செய்ய முடியாது.

ஆகவே, சிறப்பான நம் முன்னோர்களின் நூல்களைப் படியுங்கள். அவைகளை இன்றைய இளைய தலைமுறை மாணவர்களின் பாடத் திட்டங்களில் கொண்டு வாருங்கள்.

இத்துடன், அவர்கள் கூறிய உடலியல் தத்துவம், அதன் இயக்கம், அத்துடன் உடலுக்கு அப்பாற்பட்ட ஆன்மாவைப் பற்றிய அறிவு, மேலும், அதற்குத் தடையாக இருக்கின்ற மனம் போன்ற எல்லாத் துறைகளிலும் நம் சித்தர் பெருமக்கள் என்ன கூறுகின்றார்கள் என்பதை எடுத்துப் படிக்க வேண்டும்.

இதுமட்டுமின்றி, இயற்கை அன்னையின் இயல்பையும், அதில் காணப்படும் பல்வேறு உயிர்களின் உன்னதமும் என எல்லாவற்றையும் எளிதாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

இவைகள் எல்லாம் எங்கு உள்ளது என்பதை அறியும் ஆவலில், அனேக இடங்களுக்கு அலைந்து திரியாமல், அருகே உள்ள நம் சித்தர்கள் மற்றும் ஞானிகளின் நூல்களைக் கற்றுக் கொண்டாலேயே, ஏராளமான எளிய வாழ்வியல் உண்மைகளை அறிய முடியும். அவைகளை அறிந்து, அதன்படி வாழ முயற்சிக்கும் பொழுது, அந்த இயற்கை அன்னையே நமக்கு மெய்ப்பொருளைக் காட்டிக் கொடுப்பால் என்பதில் எந்தவிதமான சந்தேகமும் தேவையில்லை.

எனவே, சித்தர் நூல்களைக் கற்று, இந்த மனித உடலோடு, உயிரின் இருப்பை ஒப்பீடு செய்து, அதன் சூக்ஷுமத்தைப் பற்றி அறிந்து கொண்டால் போதுமானது.

மனிதன் மரணமில்லாப்பெரு வாழ்வை வாழ வேண்டி, எல்லோரும் இன்புற்றிருக்க விரும்பிய சித்தர் பெருமக்கள் எளியதாக அதை எல்லோருக்கும் கொண்டு சேர்க்க விரும்பினாலும், அது சித்த சுத்தி இல்லாதவர்களுக்கு எட்டாத கொம்புத் தேனாகத்தான் இருக்கின்றது.

ஆகவே, அவரகள் கொடுத்த சாகாக்கல்வியைக் கற்பதற்கான முதல் அடிப்படைத் தகுதியே தூய்மையான உள்ளமும், அனைத்து உயிர்களையும் தன் உயிர் போன்று நேசிக்கும் அன்பும்தான் அவசியம்.

அன்புள்ள அனைவருக்குமே மெய்ப்பொருள் இரகசியம் எளிதாக வெளிப்படும் என்பதினால்தான், இயற்கை அன்னையும் இதற்காகத்தான் முதன்மைப் பொருள் எனப்படும் ஏகவஸ்துவை நமக்காகவே படைத்துள்ளது.

அது சாதாரண மனிதன், இறை நிலை மனிதனாக இந்த பூ உலகில் வாழ்ந்து, அதன்பிறகு இறவாப் பெரு நிலையை அடைந்து, என்றும் இருக்கின்ற அமரனாக ஆகக்கூடிய அடுத்த பரிமாணத்திற்கு நம்மை அழைத்துச் செல்கின்ற அற்புதமான வஸ்து ஆகும்.

இதைக் கொண்டு இறந்து போன அல்லது வறண்ட உடலோடு பொருத்திப் பார்க்கக் கூடாது. இக்கல்விக்கு அடிப்படையாக கூறப்பட்ட ஸ்தூலமான மெய்ப்பொருள் என்ற ஏக வஸ்து மனித உடலுக்கு நன்மை செய்யுமா? உடலுக்கு போதிய சத்தைக் கொடுத்து, உடலை வளர்க்கும் உபாயம் செய்யுமா? என்பவைகளை ஆராய்ந்து பார்த்துக் கொள்ள வேண்டும்.

மனித உடலுக்கு நன்மை செய்வதாக இருந்தால், அந்த ஆய்வை அப்படியேத் தொடரலாம். அந்த மெய்ப்பொருளை அப்படியே நேரடியாகவும், தொடர்ச்சியாகவும் சுத்தி செய்யாமல் அப்படியே சாப்பிட்டால் அவ்வளவு நன்மைகள் செய்யாது.

இந்த மெய்ப்பொருளை தேர்வு செய்வதில் தெளிவு இல்லாமல் குழப்பம் ஏற்பட்டால், இந்த சாகாக்கலை என்ற கல்வியில் எந்த விதமான முன்னேற்றத்தையும் அடைய முடியாது.

இந்தக் கருத்தை உறுதி செய்யும் விதமாகத்தான் மேல் நாட்டு ஞானிகளின் பல்வேறு நூல்களும் அமைந்துள்ளன. இனி அவர்கள் கூறும், அந்த முதல் பொருளைப் பற்றிக் காணலாம்.

இக்கலை உலகிலேயே நம் நாட்டில் மட்டுமே உள்ளதாக பலர் கூறுகிறார்கள். உண்மை அதுவல்ல. உலகின் பல பகுதிகளிலும் இந்த சாகாக்கலை குறித்த ஆய்வாளர்கள் இருந்துள்ளார்கள்.

அவர்களும் பல நூல்களை எழுதியுள்ளார்கள்.

அந்த நூல்களில் ஞானிகளின் முதல் பொருளைப்பற்றி அவர்கள் என்ன கூறுகின்றார்கள் என்றால், ஞானிகளின் இரகசிய கலைக்குத் தேவையான அந்த முதல் பொருளை உவமையாகவும், மிகவும் புரியாதப் பல பெயர்களிலும் கதைகளாக விளக்குகிறார்கள்.

அதனால் முதல் பொருளை அடையாளம் காண்பது அரிதாக உள்ளது என்று மேல் நாட்டு ஆய்வாளர் **அர்னால்டு** அவர்கள் கூறுகிறார்கள். இதை இரசவாதிகளின் இரசம் என்று ஞானிகள் அழைப்பர். இந்தப் பொருள் நீராவி அல்லது பனித்துளி போன்று தூய்மையானது என்று **ஆர்ட்டிபியூஸ்** அவர்கள் கூறுகிறார்கள். மிகப் பழங்கால ஞானியான **தியோபரஸ்டஸ்** என்பவரும் முதல் பொருளை **'நீர்'** என்றே குறிப்பிடுகிறார்.

நம் சாகாக்கலையின் முதல் பொருளானது பஞ்ச பூதங்களில் நீர் அம்சம் பெற்ற ஒரு பொருளாக உள்ளது. அதை நெருப்புத் தன்மையுள்ள நீர் என்றும் மருத்துவர் **ஹெர்மஸ்** அவர்கள் கூறுகிறார்.

ஆனால், இந்த நீர்மப் பொருளைப் பற்றி யாருமே வெளிப்படையாகக் கூறவே இல்லை. அதை மிகவும் இரகசியமாகவே வைத்துள்ளார்கள். ஆரம்பத்திலிருந்தே அனைத்து ஞானிகளாலும், மெய்ப்பொருள் மறைக்கப்பட்டு வருகிறது என்று இவரும் கூறுகிறார்.

இதே கருத்தை அகத்தியரும், **"பஞ்சபூதத்தில் ஒன்று"** என்று கூறியுள்ளதைக் காணலாம்.

நம்முடைய முதல் பொருள் **காற்று, நீர், நெருப்பு** ஆகிய தனிமங்கள் ஒன்றாக கலந்துள்ள கொழுப்பு நீர் வடிவம் கொண்ட ஜீவ விருட்சத்தின் இனிப்புச் சாறு ஆகும்.

இதற்கு **ஞானிகளின் பாதரசம்** என்று ஜெர்மானிய அறிஞரும், தத்துவ ஞானியுமான, மருத்துவர் பாரசெல்ஸஸ் கூறுகின்றார்.

நமது மூலப் பொருள் இயற்கைப் பொருளால் ஆனது. இந்த மூலப் பொருள் தடிப்பான பிசுபிசுப்பான ஒரு நீர் ஆகும் என்று **கிளாடியஸ்** அவர்கள் கூறுகிறார்.

இவ்வாறு நம் நாட்டு சித்தர்களும், மேலை நாட்டு ஞானிகளும் கூறும், மனிதனுக்கு ஆரோக்கியத்தையும், நீண்ட ஆயுளையும், ஞானத்தையும், வழங்கும் முதல் பொருளான, அந்த ஸ்தூல மெய்ப்பொருளை **நீர்** என்றே குறிப்பிடுகிறார்கள்.

சிலர் இதனைக் '**கல்**' என்றும், சிலர் இதனை '**விதை**' என்றும் குறிப்பிடுகிறார்கள். இவைகள் அனைத்தும் ஒரே பொருளைத்தான் குறிக்கும் என்பதை, நம் நாட்டு சித்தர் பெருமக்களும், மேலை நாட்டு சித்தர் பெருமக்களும் கூறுகின்றார்கள்.

அதிலே, ஒரே பொருளில் இருந்து கிடைக்கும் முதல் பொருளான பூநீருக்கு சித்தர்கள் அகரம், விந்து, சிவம், சுயம்பு நீர், வெண்சாரை, ஏகவஸ்து, பிரணவப்பொருள், பூநீர், சாரம் என பல பெயர்களில் அழைக்கின்றனர்.

அதேபோல் மேலை நாட்டினர் ஒருபூதம், நிரந்தர நீர், உயிர் நீர், வணங்கத் தக்க நீர், அறிவுநீர், ஞானிகளின் இரசம், சொர்க்கத்தின் பனித்துளி, கன்னியின் பால், இரச உடல், உடலின் உயிர், ஆசீர்வதிக்கப் பட்ட நீர், அறிவாளி நீர், தாது

நீர், வான் சம்பந்தப்பட்ட நீர், ஜீவ விருட்ச நீர், கல், விதை என ஏராளமான பெயரிட்டு அழைக்கிறார்கள்.

இந்தப் பெயர்களைக் கொண்டு யாரும் குழப்பமடைய வேண்டியதில்லை. இவைகள் அனைத்தும் ஒரே பொருளைக் குறிக்கும் சொல் ஆகும்.

அதாவது, சாகாக்கலை ஆய்வாளர்களும், சித்த வைத்தியர்களும், இரசவாதிகளும் என யாராக இருந்தாலும், இக்கலையில் வெற்றி பெற வேண்டுமானால், ஆசைகள் இல்லாமல், அந்த மெய்ப்பொருளை அறிந்துக் கொண்டு, அதன் உட்கூறுகளாகிய மூன்று பொருள்களையும் கொண்டு, '**முப்பு**' முடிக்க வேண்டும் என்பதை அறிய வேண்டும்.

இதிலே, முதல் பொருளை சந்தேகத்திற்கு இடம் இல்லாமல் உறுதி செய்து கொள்ள வேண்டும். "**முதல் பொருள் தெரியா விட்டால், மீதி இரண்டும் உனக்குத் தெரியாமல் போய்விடும்**" என்று **கிளாடியஸ்** என்ற ஞானி கூறுகிறார்.

முதல் பொருளை அறிய இதுவரைக் கூறப்பட்ட இவர்களின் கருத்துரைகள் போதுமா? என்றால், நிச்சயமாகப் போதாது.

காரணம் இதில் முதல் பொருள் நீராக உள்ளது என்பது மட்டுமே ஞானிகளின் கருத்துக்கள் மூலம் உறுதி செய்யப் பட்டுள்ளது. அதன் நிறம் மற்றும் தன்மை போன்றவற்றைக் கூறும் பல கருத்துக்கள் அவர்களது நூல்களில் மட்டுமே காணப்படுகின்றன.

அவற்றையும் படித்து இதோடு ஒப்பிட்டுப் பார்த்தால் மட்டுமே, முதல் பொருளை அறிந்து கொள்வது எளிதாகும்.

எனவே சித்தர் நூல்களைச் சிறப்பாகப் படியுங்கள். இயற்கை கொடுத்துள்ள இனிப்பான அந்த முதல் பொருளை கண்டுபிடியுங்கள்.

இக்கலையில் வெற்றிபெற சித்தர்கள் உங்களுக்குத் துணை செய்வார்கள்.

## 2. அண்டம் - பிண்டம்

அண்டம், பிண்டம் என்பது சித்தர்களின் பரிபாசை எனலாம். ஏனெனில், இதுவும் மறைமுகமாக எட்டு, இரண்டு என்பதையே குறிக்கும்.

உருவத்தில் உள்ளதை பிண்டம் எனவும், அருவத்தில் உள்ளதை அண்டம் எனவும் சித்தர்கள் குறிப்பிடுவார்கள்.

உயிருக்கு உதவுவதற்காக பஞ்சபூத ஆற்றல்கள் உருவ நிலையில் உடலாய் நமக்கு அமைகிறது. அந்த நிலையில் அதற்கு பிண்டம் என்று பெயர். இப்படி உடல் உருவாக நாத - விந்து என்ற வித்துப் பொருள் தேவை.

அதாவது, கண்களுக்குத் தெரியாத விதையின் மூலம் வெளிப்பட்டு, கண்களுக்குத் தெரிகின்ற மிகப்பிரமாண்டமான

ஆலமரம் எப்படிப் பல்வேறு கிளைகளின் வாயிலாக பரந்த இந்த மண்ணிலே தனது பரவலான உடலைக் கொண்டு, உயர்ந்து நிற்கின்றதோ, அவ்வாறே, மற்ற சீவர்களும் கண்களுக்குத் தெரியாத தங்களது வித்தைக் கொண்டு, அதன் அரூப இயல்பை இழந்து, உருவ நிலையில் தோற்றத்திற்கு வருவதால் அவைகள் "**பிண்டம்**" என்கிற பெயரைப் பெறுகின்றன. அதாவது வடிவமாய் வெளிப்பட்ட வித்துள்ள மூலப் பொருட்களே பிண்டம் ஆகும்.

இதனையே சித்தர்கள் **நாதம் - சத்தி - மதி** என்றும் கூறுவார்கள். இது சித்தர்களின் மெய்ஞான அறிவியல் படி, **அண்டம்** என்பது வெட்டவெளி நிலையில் இருந்து உலகின் வடிவப் பொருட்கள் உருவாக முதற்காரணமாக அமைந்த '**அணுப்பொருள்**' ஆகும்.

உடலாய் உருமாறிய பஞ்சபூத ஆற்றலுக்கு தொடர்ந்து உதவ, அரூப நிலையில் இருந்து வித்து எதுவும் இல்லாமல், நேரடியாகப் பிறக்கும் பெரு வடிவப் பொருள் ஒன்று இறைவனது கருணையால் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. இதனையே சித்தர் பெருமக்கள் '**அண்டம்**' என்பதாகக் கூறுகின்றார்கள்.

இது வித்தின்றி விளைவதால் '**செம்பொருள்**' என்றும் கூறுவர். இது நமது உடலின் வடிவக் கட்டமைப்பை திரும்பவும் அரூப நிலையின் பிராண ஆற்றலாய் மாற்றி உயர்த்தும் தன்மை உடையதாகும்.

இப்படி நமது உடலின் தன்மையானது திரும்பவும் **அண்டம்** என்கிற பொருளால் மாற்றப்பட்ட நிலையில் மட்டுமே உடல் பிராண ஆற்றலை நேரடியாகக் கிரகித்துப் பயன் படுத்தும் வசதியை அடையும். நமது உடலின் உள்ளாக இருக்கும் உயிருக்கு உதவும், பிராண ஆற்றலை முழுவது மாகக் கட்டுப்படுத்தி முறையாக உடலில் நிலை பெறச் செய்வதும், இந்த **அண்டம்** என்கிற பொருளால் மட்டுமே சாத்தியமாகும்.

இப்படி நமது உடலின் இயல்பை முற்றிலும் வேறு விதமாக தலைகீழாய் மாற்றக் கூடியதால் இதனை **'ஜோதி'** எனவும் சித்தர்கள் கூறுவார்கள்.

அண்டம் என்கிற இந்தப் பொருளும் எட்டு, இரண்டில் ஒன்றாகும். அண்டம் என்கிற இந்தப் பொருளை அறிந்து அதனைத் திருத்தி அதன் மூலமாகப் பிண்டத்தைத் திருத்தும் போது மட்டுமே, நமக்கு உடல் அளவில் பிராணாயாமம், யோகம் முதலியவைகள் சித்தியாகும்.

இவ்வாறு உடலை எட்டு, இரண்டால் முறைப் படுத்தாமல் செய்யும் யோகமும், பிராணாயாமமும் உடலை அழிக்கவே செய்யும். அதுமட்டுமின்றி, உடலில் தீவிர நோய்கள் உருவாகவும் அது காரணமாகும்.

இறையுணர்வு அனுபவம் பெற்ற எவருமே, இந்த எட்டு இரண்டு என்பதைப் பற்றி அறியாமல் அடைந்திருக்க முடியாது.

இதனை அறியாதவரை எவரும் எவ்விதமான ஆன்மீக முறையிலும் உண்மையான வளர்ச்சி பெற்றவர்கள் என்று கூறுவதோ, அல்லது ஞான நிலை அடையப் பெற்றவர்கள் என்று கூறுவதோ இயலாது.

இவ்விதம் உண்மை அனுபவம் பெற்ற எவருமே எட்டு, இரண்டு என்பதைப் பற்றிச் சுட்டிக் காட்டாமல் இருக்க முடியாது.

இந்த எட்டும், இரண்டும் என்பதைப் பற்றி எல்லா சித்தர் பெருமக்களும் பெரும்பாலும் பேசாமல் இருப்பதில்லை. இறுதியாக நம்மிடையே வாழ்ந்த வள்ளல் பெருமானாரும் இந்த எட்டு, இரண்டைப் பற்றி ஏராளமாகப் பேசுகின்றார்.

எட்டும் இரண்டும் என்பதற்கு விளக்கத்தை சித்தர்கள் பெரும்பாலும் மறைத்து வைத்தே பேசுவார்கள். அதற்குக் காரணம், எட்டும் - இரண்டும் என்பது சன்மார்க்கத்திற்கான பயிற்சி.

இப்பயிற்சி சத்குரு மூலமாக மட்டுமே மேற்கொள்ள வேண்டியது ஆகும். இந்தப் பயிற்சியை தனிப்பட்ட முறையில் அறிந்து, தவறாகச் செய்தால் அதனால் உடல் உபாதைகள் உண்டாகி, உடல் நலக் குறைவுகள் ஏற்படுவதுடன், மன நல பாதிப்புகளும் ஏற்படும்.

**“எட்டு இரண்டு என்பது இயலு முற்படிஎன**
**அட்ட நின்று ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி”**

என்று வள்ளல் பெருமான் கூறி உள்ளார்கள்.

ஆக எட்டு என்ற எண்ணிற்கு தமிழில், **‘அ’** என்ற எழுத்தும், இரண்டு என்ற எண்ணிற்கு தமிழில், **‘உ’** என்ற எழுத்தும் பயன் படுத்தப்படுகிறது.

**‘அ’** என்பது **அடி** என்ற பதத்திலும், **‘உ’** என்பது உச்சி என்ற பதத்திலும் எடுத்துக் கொள்ளப்படுகின்றது. ஆக **அடி, முடி** என்பதைத்தான். அன்றைய பெரியவர்கள் அடி, முடி காணா அண்ணாமலை என்று அழைத்தனர்.

அதாவது, **அடி, முடி** என்ற இந்த இரண்டையே **எட்டு, இரண்டு** என்று பரிபாசையில் கூறப்படுகின்றது.

இதிலே, **அடி** என்றால், **கால்** எனப்படுகின்றது. அவ்வாறே, **முடி** என்றால், **தலை** எனப்படுகின்றது.

அதாவது **‘கால்’** என்றால், தமிழ் மொழியில் **“காற்று”** என்று பொருள் கொண்டு, **“மூலாதாரத்தின் மூண்டெழு கனலை, காலால் எழுப்பும் கருத்தறிவித்தே”** என்ற அவ்வைப் பாட்டியின் அருமையான வழிகாட்டுதலின் படி, யோகிகள் மூச்சுப் பயிற்சி என்பதின் மூலம் காற்றைக் கையாண்டு, குண்டலினி சக்தியை மூலாதாரம் முதற்கொண்டு ஆறு ஆதாரச் சக்கரங்களின் வழியாக சகஸ்ரஹார சக்கரத்தின் உச்சியில் கொண்டு சேர்க்கும் பொழுது, அங்கே செம்பொருள் தாமரை மலருவதையே இங்கு சுட்டிக் காட்டிக் கூறப்படுகின்றது.

இதனையே, வள்ளுவப் பெருந்தகை தமது குறட்பாவில் கூறுவதைக் கவனியுங்கள்.

**அலர்எழ ஆருயிர் நிற்கும் அதனைப்**
**பலர் அறியார் பாக்கியத் தால்.** - குறள் எண்:1141. என்கின்றார்.

அதாவது, **அலர்** என்பது பண்டைய தமிழ் மொழியில் மலர் என்ற பொருளில் கூறப்படுகின்றது. அந்த மலர் மலரும் பொழுது, அவனது ஆயுள் கூடும் என்பதைத்தான் பலரும் அறியவில்லை என்று இவர் கூறுகின்றார்.

இந்த எட்டு, இரண்டைப் பற்றி, யோகத்தில் கூறப்படும் வழிமுறைகளில் ஒரு சாதகன் சாதிக்க வேண்டுமெனில், அவனுக்கு வைத்திய சாஸ்திரத்தில் சித்தர்கள் கூறியுள்ள அதே எட்டு, இரண்டு இரகசியத்தின் மெய்ப்பொருள் அறிந்தாக வேண்டும்.

அந்த வகையிலே, கற்பம் உண்ணாமல் செய்யப்படும் பிராணயாமப் பயிற்சிகள் சாதகனுக்கு சாகாக்கலை என்ற சக்தியை அளிக்காது என்று மறைமுகமாக இதே சித்தர் பெருமக்களால் கூறப்பட்டுள்ளது.

இதிலே, சன்மார்க்கத்தைக் கடைப்பிடிக்கின்ற சாதுக்கள், அல்லது அஷ்டாங்க யோகத்தை நடைமுறைப்படுத்துகின்ற யோகிகள் என எவர்களாக இருந்தாலும், அவர்கள் நிச்சயமாக வைத்திய முறையில் கூறப்பட்டுள்ள எட்டு, இரண்டை அறிந்து முப்பு முடிக்காமல், அழியாத கற்ப தேகத்தைப் பெற முடியாது என்ற உண்மையை ஒவ்வொருவரும் உணர வேண்டும்.

அதை விடுத்து, வீம்புக்கு இதுதான் சிறந்தது என்று, அவரவர்கள் மார்க்கத்தை மட்டும் உயர்வாகப் பேசுவதும், மற்ற மார்க்கங்களை மட்டமாகப் பேசுவதும் சாதிக்க நினைக்கும் சாதகனுக்கு சரியாக இருக்காது. அவ்வாறு சரியாகச் சாதிப்பவன் எவனோ அவனே **சாது** என்றும் அழைக்கப்படுகின்றான்.

வள்ளல் பெருமான் யோகம், வைத்தியம் என எல்லா வற்றையும் ஏற்று, அவைகளை தன் வாழ் நாளிலே நடை முறையில் கொண்டிருந்தார் என்பதை எவரும் மறந்து விடக் கூடாது.

மற்ற சீவர்களுக்கு உணவு அளிப்பதை மட்டுமே வெகுவாகச் செய்யும் இவர்கள் வேண்டாதப் பல காரியங்களைச் செய்வதையும் கண்டுகொண்டு, கடைத்தேரும் உண்மை மார்க்கத்தை மனமாற ஏற்றுக் கொள்ள முன்வர வேண்டும்.

இருமைகள் இருக்கும் மனதிலே, இறைவன் எழுந்தருள மாட்டான் என்ற எளிய உண்மையை அனைவரும் நன்கு அறிந்துக் கொள்ளவும் வேண்டும்.

அந்த வகையிலே, மனித உடல் உருவாகும் நிலையில் தொடங்கி, உடலில் இருந்து உயிர் பிரியும் காலம் வரையிலும், அவற்றுக்கு உதவும் இந்தப்பொருட்கள் பஞ்சபூதப் பொருட்களே என்பதை எளிதாக அறிந்து, எல்லையில்லா அந்த மெய்ப்பொருளை எட்டிப்பிடிக்க வேண்டும்.

இந்த எட்டு, இரண்டு என்பதில், எட்டு என்ற **அ** என்பதை **அகரம்** எனவும், இரண்டு என்ற **உ** என்பதை **உகரம்** எனவும் கூறி, அதில் ஒன்றை **அப்பு** எனவும் மற்றொன்றை **உப்பு** எனவும் சித்தர்கள் கூறுகின்றனர்.

இவற்றின் நிறமோ ஒன்று வெள்ளையாகவும், மற்றது சிகப்பாகவும் இருக்கும். சிவப்பான பொருளை வாலைப்பெண் என்றும் அவளே தேவி என்றும் சித்தர்கள் பூசிப்பார்கள்.

அழியும் நமது உடலை இந்த இரண்டும் சொரூப சித்தி அடையும் அளவுக்கும், காயசித்தி என்கிற அழியாத தன்மை கொண்டதாகவும் மாற்றக்கூடியதாகும்.

நம்முடைய உடலில் '**பிண்ட**' அணுக் கட்டமைப்பு இருக்கும் வரையிலும் அதனை நம்மால் புகைப்படம் எடுக்க முடியும். அதுவே '**அண்ட**' அணுக் கட்டமைப்பாய் மாறிய நிலையில், உடலில் பஞ்சபூத ஆற்றல்கள் தம்முடைய ஊடுருவும் அரூபத்தன்மையை அடையும்.

அப்படிப்பட்ட நிலையில் ஒளி ஊடுருவும் என்பதால் அப்போது எடுக்கப்படும் புகைப்படம் பதிவாகாது. அவ்வாறு வள்ளலாரின் உருவம் புகைப்படத்தில் பதிவாகாமல் விடுபட்டதற்குக் காரணம், இப்படிப்பட்ட சொரூப சித்தியை அவர் அடைந்ததால் ஏற்பட்டதாகும்.

சொரூப சித்தியை அடைய முயன்றவர்கள் பெரும் பாலும் தமது உடலுடனேயே அந்த நிலைக்கு மாறி

விடுவார்கள். அப்படி அவர்கள் உடலோடு செல்லாமல், உடலை விட்டுச் செல்லும் நிலையில் அல்லது சொரூப சித்தி முழுமை அடையாத நிலையில் உடலில் இருந்து உயிர் பிரியுமானால் அப்படிப்பட்டவரின் உடல் அழியாமல் நிலை பெறும். வெட்டவெளியிலேயே இருக்கும் இப்படிப்பட்ட உடல்கள் அழியாமல் இருப்பதற்குரிய காரணம் இதுவாகும்.

சித்தர்களால் பயன்படுத்தப்படும் இந்த அதி முக்கியமான இரண்டும் நாம் அன்றாடம் பயன்படுத்தும் பொருட்களில் மறைந்து இருப்பதாகும்.

இவற்றில் ஒன்றை நாம் குழந்தைகளின் விளையாட்டில் காண முடியும். மற்றது வெளியில் விளைவதாகும். இவை இரண்டும் இறைவன் திருவருளால் மட்டும் அறியக் கூடியதாகும்.

இந்த இரண்டில் ஒன்று குருவாகும். ஆகவே, "**குருவில்லா வித்தை பாழ்**" என்பதும், தொட்டுக்காட்டாத வித்தை பலிக்காது என்பதுவும் போன்ற பழமொழிகளும், இந்த குறிப்பிட்ட முறையைப்பற்றி விவரிக்க உருவானதாகும்.

இந்த இரண்டையும் முறைத்தவறிப் பயன்படுத்தும் நிலையில் தான் (விதை நிலையில்) இவை இரண்டின் மாறு பாட்டால் உடலில் பிணி, மூப்பு, நரை, திரை முதலானவைகள் உருவாகும் என்பது சித்தர்களது தெளிந்த அனுபவ ஆராய்ச்சி முடிவாகும்.

இந்த இரண்டில் ஒன்று நிலத்தோடு தொடர்பு உள்ளதாகவும் மற்றது நீரிலே அழியாததாகவும் இருப்பதாகும்.

இந்த இரண்டும் திருத்தப்பட்ட நிலையில், நெருப்பிலே பிறக்கும் ஒரு பொருள் காயசித்திக்கும், சித்த வைத்திய முறையிலே அதி முக்கியமாய் பயன்படும் முப்புக் குருவாகும்.

வித்திலே பிறப்பதை சிவத்தின் கூறான சத்தி எனவும், வித்தின்றிப் பிறப்பதை சத்தியின் கூறான சிவம் எனவும், முதலாவதைச் சுப்ரமணி எனவும், பிந்தியதை கணபதி எனவும் கூடச் சித்தர்கள் கூறுவார்கள்.

சிவ பூசை, சத்தி பூசை, வாம பூசை, சோம பூசை என்பதெல்லாம் சித்தர்களின் மறை பொருள் பரிபாசையாகும்.

நேரிடையான வெறும் பூசை முறைகளால் எவ்விதமான பலனும் ஏற்படாது. மறைபொருட்கள் ஓரளவு வரை விளக்கப்படுவதற்கு சித்தர்கள் அனுமதித்திருக்கிறார்கள். இந்த எல்லை வரை தான் இந்த பொருட்களைப் பற்றி விவரிக்கமுடியும்.

விதியமைப்பும் குருவின் அருளும் இவற்றுக்கெல்லாம் மேலாக இறைவனின் திருவருளும் துணைப் புரிந்தாலொழிய எட்டு இரண்டை அறிவதும், அப்பியாசம் செய்து உண்மைத் தெளிவு பெறுவதும் இயலாததாகும்.

நமக்கெல்லாம் இறைவன் திருவருள் துணை புரிந்து உதவட்டும். தெளிவை அடையக் கருணை பொழியட்டும்.



## 3. தசதீட்சையும், குருமருந்தும்

எட்டும், இரண்டும் தசதீட்சையாகும்.

அகார, உகாரத்தில், **மகாரம்** பிறக்கும்.

சூரிய சந்திரனோடு வெளி சேர **அகாரம்** பிறக்கும்.

**இடகலை - பிங்கலை** இரண்டும் ஒடுங்க, **சுழுமுனை** திறக்கும்.

மேற்கண்டவைகள் யாவும் பரிபாசையாக சித்தர்களால் குறிப்பிடப்படும் ஒரு பொருளைக் குறிப்பதாகும். அதுவே, '**குரு மருந்து**' எனப்படும் "**முப்பு குரு**" ஆகும்.

அண்டம் - பிண்டம், நாதம் - விந்து, அகரம் - உகரம், ரவி - மதி, மீனம் - மேசம், கோசம் - பீசம், ஆண் - பெண், சத்தி - சிவம், கணபதி - சுப்ரமணி, அப்பு - உப்பு, சிற்றண்டம் - பேரண்டம், வாசி - சுழிமுனை என்று பல்வேறு பெயர்களில் சித்தர்களால் விவரிக்கப்படும் பொருள் ஒன்றே ஆகும்.

அந்த ஒரே பொருளிலேயே இரண்டும் கலந்து கட்டுண்டு கிடக்கிறது. அப்படிப்பட்ட சிவப்பொருளே **அகாரம்** ஆகும்.

இதனை அறிவதற்கே பல வருடங்கள் ஆகும். அதுவும் குருவால் தொட்டுக் காட்டப்படாமல் தெளிவு பெறுவது என்பது மிகவும் அரிது ஆகும். இந்த உபதேசம் கூட விட்ட குறை

தொட்ட குறை உள்ளவர்களுக்கே வாய்க்கும் என்கிறார்கள் சித்தர் பெருமக்கள்.

இதனை உபதேசிக்கும் முன்பாக ஒரு சீடனை தக்க விதத்தில் பன்னிரண்டு ஆண்டுகள் பரிசோதித்த பின்னரே ஒவ்வொன்றாக போதிக்க வேண்டும் என்றும் விதிமுறை செய்துள்ளனர் சித்தர்கள்.

சித்தர்பாடல்களில் அண்டம், கடுக்காய், முட்டையோடு, ஏகமூலி, வல்லாரை, திருநீற்றுப்பச்சிலை, குருவண்டு, தலைப்பிண்டம், அஸ்தி, கருங்குருவி என்றெல்லாம் விவரிக்கப் படும் பொருட்கள் வெறும் பரிபாசைகள் என்பதை வாத, வைத்திய முறைகளில் அனுபவம் பெற முயன்றவர்கள் ஆரம்பத்திலேயே புரிந்து கொள்வார்கள். தமது செயல் முறைகள் பூர்த்தியாகாமல் போகும் நிலையில் இதை எளிதாக உணர்ந்து கொள்வார்கள்.

ஆகவே வாதமானாலும், வைத்தியமானாலும் சரி, யோகமானாலும், ஞானமானாலும் சரி, ஆதிப்பொருள் இதுதான் என அறியாத நிலையில் அது முழுமைப் பெறாது.

அகார - உகாரம் என்பது இரண்டு பொருட்களாக விவரிக்கப் பட்டிருந்தாலும் இரண்டும் ஒரே பொருளில் இருந்து வெளிப்படும் தனிப்பொருளே ஆகும்.

**அகாரம்** என்பது ஆதிப்பொருள்.

அதிலிருந்து பெறப்படும் பொருளே **உகாரம்.**

ஆக அகாரத்தின் உள்ளாகவே, உகாரம் என்பது இருக்கிறது. இதைப்பிரித்து திரும்பவும் இணைக்கும் நிலையில் பெறப்படுவதே **மகாரம்** எனப்படும் பொருளாகும்.

இதனை **அ - உ - ம** சேர்ந்த நிலையில் ஓங்காரப் பொருள் என்பார்கள். இப்படிப் பெறப்படும் பொருள் இரவில் ஒளி வீசும் தன்மை உள்ள ஜோதிப் பொருளாய் இருக்கும்.

அகாரம் என்பதை அகத்தியர் வான் பொருள் ஆகிய **விண்** என்றும், அது பஞ்சபூதத்தில் ஒன்று என்றும் விவரிக்கிறார்.

"**மகத்தான சித்தர்களும் சொல்லார் பாரே**

**சொல்லாத வான்பொருள் தான் வெளியாய் காணும்**"

- அகத்தியர் பூசா விதி

இதையே வள்ளுவர் கூறும் போது,

"**ஒன்றாகி எப்போதும் அழியா அண்டம்**

**ஓகோகோ சித்தர் உண்ணும் அண்டம் தானே**"

- வள்ளுவர் முப்பு சூத்திரம்.

அகாரத்திலிருந்து பக்குவப்படுத்தப்பட்ட அண்டப் பொருள் சித்தர்களால் உடலோடு சேர்க்கும் விதத்தில் உண்ணக் கூடிய ஒரு பொருளாகவும் இருந்து வருகிறது.

அகாரம் பஞ்சபூதங்களில் ஆகாயக்கூறைச் சேர்ந்தது. விண்ணில் விளைந்து மண்ணுக்குள் வளர்வதால், நீரிலே பிறப்பதால் இதனை அப்புப் பொருள் என்றும், பரிதி என்றும், விண் என்றும், வெளி என்றும், இதனுள் தீயும் இருப்பதால் வள்ளி என்றும் சித்தர்கள் அழைப்பார்கள்.

அகரத்திற்கு அண்டக்கல் முதலாய் 320 பெயர்கள் உண்டு. அதனை அகத்தியர் பரிபாசை - 500 ல் கண்டு தெளிக. அதனால் தான் இதனை அறிவது மிகவும் கடினம்.

அகரம் என்னும் ஒரு பொருள் மூன்று பஞ்ச பூதங்களை தன்னுள் கட்டுண்ட நிலையில் வைத்திருக்கிறது. இப்படிப்பட்ட நிலையில் அது ஒரு கல்லாக இருக்கிறது. அதனையே "**ஞானிகளின் கல்**" என்கிறோம்.

இதிலே கட்டுண்டு கிடக்கும் பொருட்கள் நீராகிய இரசம், தேயுவாகிய கெந்தி, வாசியாகிய காற்று ஆகும். இதே பொருட்கள் நம் உடலிலும் இருக்கின்றன. ஆனால் கட்டுப்படாது தனித்தனி நிலையில் செயல்பட்டுக் கொண்டுள்ளன. அவை தான் **வாத, பித்த, கபம்** எனப்படும் முப்பொருட்களாகும்.

உடலிலே கட்டுப்படாத நிலையிலும், அகாரத்தில் கட்டுப்பட்டும் இருக்கின்றன. இது தான் அண்ட, பிண்ட ரகசியமாகும்.

இப்படிப்பட்ட அகாரத்தை முறைப்படி வேதிக்கும் போது, அதிலுள்ள ரசமும், கெந்தியும், வாயுவும் தனித்தனியே

பிரிய இறுதியாக பருதி என்னும் மண்ணின் கூறாகிய சாம்பலும் மிஞ்சும்.

ஆக அகாரத்திலிருந்து நான்கு பொருட்கள் பெறப்படும். இவைகளை ஏன் பிரிக்க வேண்டும்.? அகாரத்தில் கட்டுண்ட நிலையில் உள்ள பஞ்சபூதங்களைப் பிரிப்பதால் செயல்படாது ஒடுங்கும் தன்மைக்கு உரிய அவைகளின் கட்டு அவிழ்க்கப்படுகிறது. இதனால் அவைகள் திரும்பவும் செயல்படத் துவங்குகின்றன.

ஒடுங்கிய பஞ்சபூதங்களை செயல்படும் நிலைக்கு கொண்டு வரும்போது அவைகளின் செயல்திறன் மிக அற்புதமாக இருக்கும்.

நீராக உள்ளவற்றை கெட்டியாக்கும். கெட்டியாக உள்ளவற்றை சுண்ணமாக்கி நீராக மாற்றும். இப்படி அவைகளால் மாற்றப்படாத பொருட்களே இல்லை.

இப்படி பஞ்சபூதங்களைப் பிரித்து அவைகளை "**சிவயநம**" என்னும் முறையில் திரும்ப இணைக்கும் நிலையில் அதிலிருந்து ***இனிப்புச் சுவையுடையதும், தேன் போன்றதும், தெள்ளமுது என்று கூறத்தக்கதாகவும் உள்ள அமிர்தம்*** கிடைக்கிறது.

இதுவே, **‘பெரு மருந்து’** அல்லது **‘குரு மருந்து’** எனப்படும்.

இதனை நீராக, மெழுகாக, குழம்பாக, சுண்ணமாகப் பெறுகின்ற பல முறைகள் சித்தர்களால் பலவிதமாக விளக்கப் படுகின்றன.

இந்தப் பொருளை உடலில் சேர்ப்பது அமுரி தாரணை, அமிர்த தாரணை, வாசி தாரணை என பலவாறாகக் கூறப்படும்.

**"வாசியே அமுதமென அறியாது கும்பித்து மாண்டோர் கோடி"** என்பார் புலஸ்தியர் என்னும் அகத்தியரின் சீடர்களில் ஒரு சித்தர்.

இந்த முறையில் அப்பியாசம் செய்யும் ஒருவருக்கு அவரது சுவாசமாகிய 21600 - ம் மூல நாடியில் ஒடுங்கி குண்டலி ஆற்றலை உச்சிக்குக் கொண்டு வந்து உச்சிக் குழியைத் திறக்கும்.

இதன் பிறகு உடலில் உள்ள அண்ணாக்கும், உண்ணாக்கும் இணைய உடலில் உள்ள மண்டலம் திறந்து அமிர்தம் கசிந்து இறங்கும். இந்நிலையில் சாதகரது சுவாசங்கள் இடகலை, பிங்களை தானாகவே ஒடுங்கிச் சுழுமுனை திறக்கக் கும்பகம் ஏற்பட்டுச் சமாதி நிலை உருவாகும்.

சமாதி நிலை என்பது சொரூப சித்திக்குரிய துவக்க நிலை அனுபவம் ஆகும். அகாரத்தைப் பக்குவப்படுத்திப் பெறும் பொருட்களாகிய சிகாரம் முதல் உகாரம், மகாரம், நகாரம், யகாரம், வகாரம் ஆகியவற்றையும் அடைந்து முறைப்படி உடலில் சேர்ப்பதே “**தசதீட்சை**” எனப்படும்.

## 4. வாலைப்பூசை

அமுரி எனும் அமிர்தம் உட்கொண்டு தமது உடலை காய சித்தியால், ஒளியுடலாய் மாற்றி, சொரூப சித்தி அடைந்து, பிறவாப்பெரு நிலை பெற்றவர்களில் ஒருவரே நமது வள்ளல் பெருமான் ஆவார்.

பொதுவாக பிறந்தவர்கள் இறப்பதும், இறந்தவர்கள் பிறப்பதும் பொது விதி ஆகும். இதிலே, பஞ்ச பூதங்களால் பரு உடல் கொண்டு பிறந்த மனிதன் மட்டுமே பிறப்புக்கு பின் வரும் இறப்பை வென்று, சொரூப சித்தி பெறுவது சாத்தியம் என்பதை சாகாக்கல்வி கற்ற நம் தமிழ் சித்தர் பெருமக்கள் மூலமாக அறிய முடிகின்றது.

அவ்வாறு சாகாக்கல்வி கற்றவர்கள், இந்த ஸ்தூல உடலை அவர்கள் விரும்பிய காலம் வரையிலும் வைத்துக் கொண்டிருந்துவிட்டு, வேண்டாம் என்று கருதினால், அந்த உடலுடன் மண்ணில் சமாதி ஆவதும், அல்லது உடலைப் பிறர் கண்களுக்கு புலப்படாது மறைத்து வாழ்தலும் என எல்லா விதமான திறன்களைக் கொண்டவர்கள் நம் சித்தர்கள் எனலாம்.

இப்படிச் சித்தர்களது வழி முறையில் கூறப்பட்ட, அதி அற்புதமான '**சாகாக்கல்வி**' முறையை, தாங்கள் பெற்ற அனுபவத்தைக் கருணை வயப்பட்டு, மற்றவர்களும் அறியும்

படி, அழகிய தமிழ்ப் பாடல்களில் பாடியும், எழுதியும் வைத்துவிட்டு சென்றுள்ளனர்.

சித்தர்களது பாடல்கள் மூலமாக, நாம் பல துறைகள் பற்றிய விவரங்களையும் பெறமுடியும். அதிலே மிகவும் முக்கியமானது, உடலுடன் கூடிய முக்தியைப் பெறும் வழி முறையாகிய சாகாக்கல்வி என்பது ஆகும்.

நம்முடைய நவீன கல்வித் திட்டத்தின் வாயிலாக, நாம் ஏற்றி வைத்துக் கொண்ட ஏகப்பட்ட எண்ணங்களால், எதையுமே ஏற்க மனமின்றி, நமக்கு சித்தர்கள் கூறும் 'சாகாக்கல்வி' சாதனைகளைப் பற்றி ஆராயவும், அதற்கான பொறுமையும் சிறிதும் இல்லை.

இதனாலேயே, இன்றும் நம்முடன் உடலோடு வாழ்ந்து வருகின்ற பல சித்தர் பெருமக்களைப் பற்றிய உண்மைகளை நாம் சரியாக உணர்ந்துக் கொள்ள முடிவதில்லை.

சித்தர்களைப் பற்றிய விவரங்களைக் கூறும் போது, அகத்தியர் உட்பட, அனைத்து சித்தர்களும், சாகாக்கலையை அறிந்தவனது சுவாசம், முற்றிலும் மாறுபட்டு இருப்பதைப் பற்றி மிகவும் முக்கியமாகக் குறிப்பிடுகிறார்கள்.

காயசித்தி பெற்றவரது சுவாசம் சுழுமுனையால் தான் நடக்கும். அவர்களுக்கு மற்றவர்களைப் போன்று உடலில் சுவாசம் நிகழாது, என்பதாக ஒரு அற்புதமான விபரத்தைத் தெரிவிக்கின்றனர்.

அதுமட்டுமல்ல பசி, தாகம், உறக்கம் ஆகியனவும் மாறிப்போகும் எனவும் கூறுகின்றனர்.

இப்படி எல்லாம் சித்தர்களது உடலில் ஏற்படும் மாற்றம் எப்படி ஏற்படுகிறது?

எதன் மூலமாக அந்த மாறுதல்களை அவர்களால் அடைய முடிகிறது?

என்பதை அறியும் பொழுது, அவர்கள் காயசித்தி எனும் முறையில் "**அமுரி**" என்னும் கற்ப மருந்தைக் கண்டறிந்து, அதனைக் கொண்டு '**முப்பு**' முடித்துள்ள காரணத்தினால், அவர்களால் இவ்வாறு இருக்க முடிகின்றது என்பதை அறிய முடிகின்றது.

இந்த அமுரி என்பது பஞ்சபூதப் பொருட்களில் முழுமை அடைந்த பொருளாகிய அண்டக்கல்லில் இருந்து பெறப்படுவதாகும்.

இந்த அண்டக்கல் என்பதற்கு '**விஷக்கல்**' என்பதாக ஒரு பெயரும் உண்டு. இந்தப் பெயருக்கு ஏற்றபடி இந்தக்கல் தன்னுடன் அமிர்தத்தையும், அதே சமயம் விஷத்தையும் ஒன்றாக உடையதாகவே உள்ளது.

அண்டக்கல்லில் இருந்தே அமிர்தம் என்னும் அமுரியை பிரிக்க வேண்டும். அப்படி அமுரியை அடைய "வாலையெனும் தேவி பூசை" அறிய வேண்டும்.

**வாலை பூசை** என்பது அமுரியை அண்டக்கல்லில் இருந்து பிரித்தெடுக்கும் வழி முறையாகும்.

அண்டக்கல்லை எடுத்துக் கொண்டு, அதில் உள்ள மூன்று பொருள்களான பூ, நீர், பிண்டம் என மூன்றில் இருந்து, அகாரம் என்ற பூவையும், பூவுடன் சேர்ந்த காயையும் எடுத்து கல்வத்தில் வைத்து, அத்துடன் அந்த அண்டக்கல்லின் உள்ளே உள்ள உகாரம் என்ற நீரையும் கொண்டு, அது அனைத்தும் ஒரே சாறாக மாறும் வரை நன்றாக அரைத்து எடுத்துக் கொண்டு, அதன் பிறகு அந்த பூநீரை கண்ணாடிக் குடுவையில் ஊற்றி, காற்றுப் புகாதவாறு, வாலையில் வைத்து, நெருப்பில் காய்ச்சி வடிக்க வேண்டும். இப்படிக் காய்ச்சும் போது அமுரியானது சொட்டுச் சொட்டாக மற்றொரு சேமிக்கலனான குடுவையில் சேகரமாகும். அவ்வாறு கிடைக்கின்ற அந்த சுத்த நீரையே 'சுத்தகங்கை' என்றும், அதுவே 'மகாரம்' என்றும் ஆகின்றது.

அந்த அமிர்தமே "**அமுரி**" ஆகும்.

இந்த அமுரியானது எண்ணெய்த் தன்மைக் கொண்டதாகவும், வெண்மை நிறம் உடையதாகவும், பாகு போன்றும், தேன் போன்றும், இனிப்புச் சுவையுடையதாகவும், முகர்வதற்கு இனிமையான வாசனை உடையதாகவும், காற்றில் திறந்து வைக்க எளிதில் ஆவியாகக் கூடியதாகவும், ஐஸ் போன்ற ஜில் என்ற குளிர்ச்சித் தன்மை உடையதாகவும் காணப்படுகிறது.

சித்தர்களால் '**வாம பூசை**', '**தேவி பூசை**', '**கன்னி பூசை**', என்றெல்லாம் கூறப்படும் பூசை முறைகள் யாவும், இப்படி அமுரியைப் பெறக்கூடிய வழிமுறையைப் பற்றியதே ஆகும்.

அமுரியைப் பெற்ற பிறகு அதைக் கற்பமாக தொடர்ந்து உடலில் **ஓராண்டு** சேர்க்க வேண்டும். அதாவது காலை, மாலையில் கற்பமாக அமுரியை அருந்த வேண்டும். இதுவே "**அமுரி தாரணை**" என்பதாகும்.

இதனால் உடலில் காயசித்தித் தன்மை ஏற்படும். அமுரியை உடலில் சேர்க்கும் போது பத்தியம் உண்டு. அது ஒரு வேளை மட்டும் வேகவைத்த பால் சோறு உண்டு வருவதாகும். மற்ற எந்த உணவு முறைகளும் இதுப்போன்ற காயசித்திக்கு உதவாது. அவைகள் கற்பத்தை முறித்து விடும்.

"**என்றுமே அமுரியுண்டால் அனேக நோய்கள்**
**என் மகனே புலத்தியனே வீரிட்டோடும்**"
"**கிடைத்தாலே மனதுதான் ஒருமை பண்ணி**
**கிருபையுடன் ஓராண்டு அமுரியுண்டு**
**உடலதுவும் புலத்தியனே வேறு கூறானால்**
**உண்மையுடன் தசதீட்சை முடியும் பாரு**
**சடமது சித்தியாம் யோகவானாம்**"

இப்படி ஓராண்டு முதலாய், படிப்படியாய் அமுரி சேர்ந்த பல்வேறு கற்ப முறைகளை ஒருவர் முறையாக, தொடர்ந்து உட்கொண்டால், பத்தாண்டுகளுக்குப் பிறகு அவர்

செரூப சித்தி அடைய முடியும் என்பது சித்தர்களின் அனுபவ முடிவு.

இப்படி சொரூப சித்தியை தரக்கூடிய அமுரியைப் பற்றி, பல சித்தர்களும் பரிபாசையில் சுமார் முன்றூற்று ஐம்பது பெயர்களுக்கும் மேலாக குறிப்பிட்டுள்ளனர்.

எனவே அமுரியை அடையும் செய்முறையை, ஒரு குருவின் கூட இருந்து தெரிந்து கொண்டலன்றி, அவர் அதைத் தொட்டுக் காட்டினாலன்றி, நாமாகவே தெளிவாய் உண்மையை அறிவது மிகவும் சிரமமாகும்.

அமுரிக்கு உலோகங்களின் குற்றத்தை (களிம்பு அல்லது மலம்) நீக்கும் தன்மை உண்டு.

அதுப்போன்றே, ஸ்தூல உடலின் வாதம், பித்தம், கபம் போன்றவைகளின் ஏற்ற, இறக்க குற்றங்களையும், இத்துடன், சுக்ஷூம உடலின் ஆணவம், கன்மம், மாயை போன்ற மும் மலங்களையும் சேர்த்து நீக்கி மனதையும், உடலையும் சுத்தமாக்குகிறது.

அமுரியை கற்பமாக உட்கொள்ளும்போது உடலை அமரத்தன்மைக்கு மாற்றுவதற்காக, முதலில் உடலிலுள்ள நோய்க்குறைகளைப் போக்கி, இரத்த சுத்தியாகி, உடலின் மேல் தோலையே தங்கம் போன்று புதிதாக மாற்றி, மனம், உடல் என இரண்டும் சுத்தமாக மாறிவிடும்.

ஆனால், அமுரியை பற்றி அறியாத பல மூடர்கள் சிறு நீரை அமுரி என்று கருதி, சிறுவர்களின் சிறு நீரைப் பிடித்து, அதை எடுத்து முப்பு செய்ய முயற்சித்து தோல்வியைத் தழுவுவர். இவர்கள் இவ்வாறு, ஒரு வருடம் சிறுவர்களின் சிறுநீரைக் குடித்தால், உடல், மனம் மாறுமா? என்பதை எல்லோரும் சிந்திக்க வேண்டும்.

அமுரியை ஒருவர் பட்டுப்போன செடிக்கு ஊற்றினால் அது திரும்பவும் உயிர் பெற்று வளருவதை கண்கூடாகக் கண்டு அறிய முடியும். நமது சிறுநீரை ஊற்றினால் நன்கு வளர்ச்சி அடைந்திருக்கும் தாவரமும் காய்ந்து போய்விடும் என்பது அனைவரும் அறிந்ததே.

இந்த அமுரிக்கு சித்தர்களின் பாசைகளில் பல பெயர்கள் உண்டு. அதை சிவநீர், சுத்தகங்கை, ஊசிநீர், தேசிநீர், உதகநீர், உமிழ் நீர், கடல் நீர், காடிநீர், சாகரநீர், சந்திர புஷ்கரணி, ரோமநீர், மதனப் பால், சோம இரசம் என்று ஏராளமான பெயர்கள் உள்ளன.

"**நலம் பெற்ற அமுர்தத்தை காய்ச்சினாக்கால் உண்டான உப்புக்கு இந்நாமங்கள்**" - அகத்தியர் அந்தரங்க தீட்சாவிதி.

இந்த அமுரி செய்முறைக்குத் தேவையான அண்டக்கல் இயற்கையிலேயே கிடைப்பதினால், அதில் இருந்து அமிர்தம் என்ற ஆதிப் பொருள் கிடைக்கின்றது. மேலும், இதனைக் காய்ச்சும் போது, இதில் இருந்து உப்பு கிடைக்கும். ஆனால்,

நாமாக செயற்கையாக செய்த அமுரியைக் காய்ச்சினால் உப்பு கிடைக்குமா? என்பது ஆய்வுக்குரியது.

சித்தர்கள் இடத்திற்கு தக்கவாறு, இவ்வாறு பெயர்களை வைத்து, நம்மை நன்றாகக் குழப்பி விட்டிருக்கிறார்கள் என்பதை நாம் நன்கு புரிந்துக் கொள்ள வேண்டும்.

அடுத்து, இந்த அமுரி எடுக்க பயன்படுகின்ற அண்டக்கல் ஏழு விதமான நிறங்களில் காணப்படும் என்று சித்தர் பெருமக்கள் கூறுகின்றார்கள்.

அதாவது, பூ, நீர், காய் என அனைத்தையும் சேர்த்த மொத்த கல் வடிவம், இவ்வாறு ஏழு நிறங்களில் காணப்படும் என்கின்றனர்.

சித்தர்களின் சாகாக்கலையை அறிந்து கொள்ளவும், ஆன்ம ஞானத்தை அடைவதற்கும் அடிப்படை அவசியமான பண்பு, அன்பு என்று சித்தர் பெருமக்கள் கூறுகின்றனர். அந்த '**அன்பே சிவம்**' என்று சான்றோர்களும் அழைக்கின்றனர்.

அனைத்து உயிர்களிடமும் அன்பு காட்டும் ஒருவனே, அனைத்து நோய்களையும் நீக்கும் ஆதி வஸ்துவை அறிந்தவனாவான். அவனே சித்தன், அவனே மருத்துவன், அவனே யோகி, அவனே ஞானி எனலாம்.

## 5. இம்மையும், மறுமையும்!

சித்தர் பெருமக்களின் முப்பு என்பது முக்குற்றமான வாதம், பித்தம் மற்றும் சிலேத்துமம் என்பனவற்றை ஒழுங்கு செய்து, நமது இம்மை, மறுமை என இரண்டு வாழ்க்கைக்கும் இன்றியமையாததாக உள்ளது.

இதிலே, தற்போதைய இம்மை என்ற இந்த நிகழ்கால வாழ்க்கையை செம்மைப்படுத்தி, ஆரிருள் எனும் காமம், கோபம், குரோதம், லோபம், மதம் மற்றும் மாச்சர்யம் என்பனவற்றை அகற்றி, மும்மலங்களான ஆணவம், கன்மம் மற்றும் மாயை என்பனவற்றை போக்கி, வாழும் காலத்திலேயே மனிதன் என்றும் மகிழ்ச்சியுடன் வாழ முடியும்.

அவ்வாறே, மறுமை வாழ்க்கையான ஆதி அந்த அந்தர்யாமியான பரம்பொருளை அறியக்கூடிய அரிதான ஞானத்தையும் இந்த முப்பு கொடுக்கும் என்கின்றனர், நம் சித்தர் பெருமக்கள்.

முப்பு என்பது இறைவனே ஆகும். அதனால்தான் அந்த முப்பு உண்டாக்கும் மூலப்பொருளான அண்டக்கல் என்பதை எல்லாக் கோவில்களிலும், திருவிழாக்களிலும், இறை பூசைகளிலும் வழிபாட்டில் வைத்திருப்பர்.

இந்த இரகசியத்தை நமது தென்னாட்டில் வாழ்ந்த சித்தர்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள் மற்றும் மகான்கள்

அறிந்துக் கொண்டதினால்தான் அதை வழிபடும் பொருளாகவும் வைத்தனர்.

முப்பூவின் உண்மையான மூலப் பொருளாகிய மெய்ப் பொருள் இதுதான் என்பதை வெளிப்படையாக சித்தர் நூல்களில் கூறியிருந்தாலும், குருவருளும், திருவருளும் சித்திக்கப் பெற்றவர்களுக்கு மட்டுமே இவற்றை அறியும் **மெய்ஞானம்** உண்டாகின்றது.

'**அகரம்**' என்பது பற்றிய தீட்சையை ஒரு குரு நேர்முகமாக சீடருக்குத் தொட்டுக் காட்டித் தர அவர்கள் பயன் படுத்தும் காலம் சித்திராப் பௌர்ணமி தினம் ஆகும்.

பெரும்பாலும் அகரம் காட்டித் தரப்பட்ட பிறகே, பிற வழி முறைகள் பற்றி ஒவ்வொன்றாக அவர்கள் கூறுவார்கள். இதில் அகரத்தில் இருந்து பெறும் அமிர்தமான அமுரியை வைத்தே எல்லாவித சாதனைகளும் சாத்தியமாகும்.

அமுரியை அறியவில்லை என்றால், சித்தர்கள் விவரிக்கும் சித்த மருந்துகளைச் சரியாக முடிக்க முடியாது. முக்கியமாக அவர்கள் விவரிக்கும் முக்தி நிலையைப் பெறுவதோ முடியவே முடியாது.

"**கற்பம்**" உடலுக்கு வலிமையை மட்டும் தருவதல்ல. உடலையே முழுவதுமாக மாற்றி விடுவது. இப்படிப்பட்ட அற்புதமான அமுரியை போன்ற ஒன்றைத்தான், உயிர் உடலை உருவாக்கும் சமயத்தில் பயன்படுத்துகிறது.

அது தாயின் கருவறையில் உருவாகும் பனி நீர் எனப்படுகின்றது. உயிரால் உருவாக்கப்படும் பிண்டம் என்ற உடலை, எவ்விதக் கேடும் ஏற்படாதபடி, மிக அருமையாகப் பாதுகாக்கும் பனி நீர் குடமாக, தாயின் கற்பப்பை காணப்படுகின்றது.

அதற்குள்ளே மிதக்கும் குழந்தையின் பிண்டமாகிய கரு அந்த நீரால் ஒருபோதும் பாதிப்படைவதில்லை. மாறாக அதிலே அது மிதந்தபடியே தனது உடலின் முழு வளர்ச்சியையும் பெறுகிறது.

இப்படிக் கருவுரும் சமயத்தில் உருவாகிப் பயன்படும் நீரைக் கூடச் சிலர் கற்பம் செய்முறைக்குப் பயன்படுத்த முயற்சி செய்து, முறைகேடான பலன்களை அடைகின்றனர்.

மேற்படி கருக்குட நீரை பயன்படுத்துபவர்கள் ஓர் உண்மையை அறியவில்லை. கருவிலே உருவாகும் நீர், உடல் உருவாகப் பயன்படுமே அன்றி, உயிரோடு உடலை அழியாத நிலையில் இணைப்பதற்கு என்றுமே பயன்படுவது அல்ல!

இது போன்றே அண்டக்கல் என்ற ஆதிப்பொருளில் பலநூறு வகைகள் இருப்பதாகவும், பதினெட்டு வகைகள் இருப்பதாகவும் பலர் தவறான எண்ணம் கொண்டு, பெரும் பொருள் செலவு செய்து அவற்றை தேடி அலைந்துக் கொண்டிருக்கின்றனர். இது மிகவும் வருந்தத் தக்க செயலாக உள்ளது.

உண்மையில் **அண்டக்கல்** என்னும் சொல் எந்த ஒரு கல் வகையையும் குறிப்பதல்ல. மாறாக அது ஒரு வகை உப்பை

குறிக்க சித்தர்களால் பரிபாசையாக கூறப்படும் வார்த்தையே ஆகும்.

இந்த அண்டக்கல் எனப்படும் மெய்ப்பொருளானது உலகில் பல வகையாக உள்ளது என்று பலராலும் எண்ணப்பட்டாலும், அதை தவறான கருத்து ஆகும்.

மெய்ப்பொருள் என்பது ஒன்றே ஒன்று மட்டுமே.

அந்த '**அகரம்**' என்பதில், அரூப நிலைக்கு உரிய பொருளும், உருவத்துக்கு உரிய பொருளாகிய நீரும் சேர்ந்து, நெருப்பால் இணைக்கப்பட்டுள்ளது.

இவற்றைப் பிரிக்க முயலும் முயற்சியில் முதலில் வெளிவருவது சுத்தகங்கை எனப்படும் அமுரியாகும். அதன் பிறகு இந்த அமுரியைக் கொண்டு அகரம் சுத்தி செய்யப்படும். பிற வழி முறைகளுக்கும் அமுரியே பயன்படும்.

அமுரியைப் பெறுவது, அது எதுவென்று அறிந்தவர்களுக்கே எளிதானது ஆகும். அப்படி அல்லாமல் அதற்குப் பதிலாக வேறு பலவற்றைப் பயன்படுத்துவது என்பது அவர்களால் அமுரியைப் பற்றிய தீட்சையை சித்தர்களிடமிருந்தோ, நூல்களின் வாயிலாகவோ பெற இயலவில்லை என்பதையே காட்டிக் கொடுக்கிறது.

அமுரியால் முடிக்கப்படும் மருந்துகளில் உயிர்ப் பொருள் அழியாமல் காக்கப்படும் என்பதால் அவற்றை நோய்களுக்கு மிகக் குறைந்த அளவே சித்தர்கள் பிரயோகம் செய்வர். அந்த பிரயோகமும் நேரடியாக இல்லாமல் அமுரி

உப்பை அமுரி விட்டு ஒரு சாமம் அரைத்து வில்லை செய்து உலர்த்திப் புடமிட்டு சுண்ணம் செய்து அதனை மருந்தில் கலந்தே சித்தர்கள் உபயோகிப்பர்.

இந்த சுண்ணத்தை மீண்டும் அமுரி விட்டு அரைத்து உலர்த்தி பஞ்ச சுண்ண குகையிலிட்டு புடமிட்டு எடுக்க வேண்டும். இவ்வாறு ஐந்து புடமிட கடுங்கார சுண்ணமாகும்.

இந்த சுண்ணத்தை கையில் தொட்டாலோ, வாயிலிட்டு சுவைத்தாலோ எரிச்சல் வராது. புண்ணாகாது. மாறாக குளிர்ச்சியாக ஜில் என்று குளுக்கோஸ் போன்று தான் இருக்கும்.

கடுங்காரம் என்பது வெளிப்பட்டுத் தோன்றாமல் மறைந்தே இருக்கும். இதுவே முப்பு சுண்ணத்தின் சிறப்பும், அடையாளமும் ஆகும்.

முப்பு சுண்ணம் என்றும், அண்டக்கல் சுண்ணம் என்றும், வழலைச் சுண்ணம் என்றும், சத்தி முப்புச் சுண்ணம், சிவமுப்புச் சுண்ணம் என்றும் சித்தர்களால் கூறப்படும் பல்வேறு பெயர்களில் கூறப்படும் சுண்ணங்கள் அனைத்தும் அமுரி எனப்படும் ரச நீராலோ, அல்லது கந்தக நீராலோ அரைக்கப்பட்டு சுண்ணமாக்கப்படுபவை தான்.

இவைகளுக்கு அடிப்படையான பொருள் ஒரே ஒரு பொருள் மட்டும் தான். அது '**ஓம்**' என்றும், '**அல்லாகூ அக்பர்**' என்றும், '**பிதா சுதன் பரிசுத்த ஆவி**' என்றும் வெவ்வேறு பெயர்களில் அழைக்கப்படுகிறது.

## 6. மெய்ப்பொருள்

வேதங்களில் முதன்மையாக உள்ள ரிக் வேதத்தின் ஒன்பதாவது பாகத்தில், கல்ப அமிர்தம் பற்றி விரிவாக கூறப்பட்டுள்ளது.

அதில் மெய்ப்பொருளை சோமக்கொடி என்ற ஒருவகை கொடியில் இருந்து பிழிந்து எடுக்கப்பட்ட இரசம் அல்லது அதன் சார் என்று கூறப்பட்டுள்ளது.

இது ஒரு உருவகம் மட்டுமே.

இந்த சோமரசத்தை, சோம பானம், அமிர்தம் என்று கூறிக் கொண்டு, சாதாரண போதை வஸ்துவாகிய "மது" குடித்த மடையர்களும் இந்த வையகத்தில் உண்டு.

இதற்கு அப்படியே பொருள் கொள்ளக்கூடாது. இதில் கூறப்பட்ட இதர தகவல்களையும் பொருத்தி பார்த்தால் உண்மை வெட்ட வெளிச்சமாகப் புரியும்.

இப்படி வேத நூல்களைப் படித்தால் அனைத்து தகவல்களும் உருவகமாகவே உள்ளதைக் காணலாம்.

இவைகளிலிருந்து சற்றே மாறுபட்ட நம் சித்தர் நூல்கள் சற்று வெளிப்படையாக இதைக் கூறுவதைக் காணலாம்.

அந்தத் தகவல்களின் அடிப்படையில், இரசாயணக் கலையின் முதன்மைப் பொருளை பற்றி '**துர்வாச மகரிசி**'

அவர்கள் கூறும்போது, ‘**மூலக்கிழங்கு முளைத்தே கிடக்குது**’ என்கிறார்.

அதாவது முதல் பொருளை கிழங்கு என்கிறார்.

மேலும் அது தயாராக உள்ளது, அதை எடுத்தால் போதும் என்கிறார்.

எனவே பூநீர் எனப்படும், அந்த மூலப் பொருளை ஆய்வாளர்கள் தயாரிக்க வேண்டிய அவசியமே இல்லை.

இயற்கையில் கிடைப்பதை அப்படியே எடுத்தால் மடுட்மே போதுமானது.

அகத்தியர் அமுத கலை ஞானம் -- 1200 என்ற நூலில்,

"**தானென்ற அகாரமடா விந்து விந்து,**
**தன்மையுள்ள விந்துநீர் தண்ணீராச்சு**" என்கிறார்.

அதாவது, ‘**அகரம்**’ எனப்படும் முதல்நீராகிய அந்த “**பூநீர்**” தண்ணீராக உள்ளது என்கின்றார்.

இதே தன்மை கொண்ட பாடலை அகத்தியர் அந்தரங்க தீட்சாவிதி என்ற நூலிலும் காணலாம்.

மேலும் பல இடங்களில் அகத்தியர் இந்த கருத்தை திரும்பத் திரும்பக் கூறுகின்றார்.

இராமதேவர் வைத்திய காவியம் -- 1000 என்ற நூலிலும் பூநீர் எனப்படும் வெண்சாரை தண்ணீராக உள்ளது என்று கூறியுள்ளார்.

இதே கருத்தை நந்தீசர் கருக்கிடை -- 300 என்ற நூலில் கூறியுள்ளதைக் காணலாம்.

கோரக்கர்நாதர் பேதம் -- 25 என்ற நூலிலும் இதே கருத்து உள்ளதைக் காணலாம்.

முதல் பொருளான பூநீர் பற்றி 'அகத்தியர் பரிபாசை - 500' என்ற நூலில், "**தொண்டர்களை கிருபை வைத்து பிழைக்கச் செய்த துகளில்லா பிரணவமே சுயம்பு நீரே**" என்கிறார்.

ஆகவே, இந்த நீரை யாரும் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. இது இயற்கையில் தானாகவே கிடைக்கும் சுயம்பு நீர் என்கிறார்.

எனவே இந்த நீரை சித்தர்கள் கூறிய முறைப்படி எடுத்தால் மட்டும் போதுமானது. இந்த நீர் குறித்து சித்தர்கள் கூறிய கருத்துக்களை கூறிக் கொண்டே போகலாம். உண்மையில், எல்லா சித்தர்களும் இதை நீர் என்றே தெளிவாகக் குறிப்பிட்டு உள்ளார்கள்.

அப்படிப்பட்ட இந்த நீர் என்பதின் மூலப்பொருள் என்பது ஆணுமல்ல, பெண்ணுமல்ல. இரண்டும் சேர்ந்த ஒரு

அலிப்பொருள். இந்த அலிப்பொருளே நமது உடலை அழியா நிலைக்கு உயர்த்தும் உன்னதப் பொருள்.

இது உலகத்தில் உள்ள அனைத்துப் பொருளையும் உருவாக்கும் ஒரு சிறந்த விதை. ஆகவே இதனை சிம்ஹபீஜம் எனலாம்.

இந்தப் பொருள் எங்கே கிடைக்கும்? பூமியிலா? வானத்திலா? எனில் இரண்டும் இல்லை. இரண்டுக்கும் இடையில் காற்று வெளியில் உள்ளது. ஆகவே இதனை ஆகாயத்திற்கும், பூமிக்கும் இடையில் தேடுங்கள்.

இப்பொருள் அனைத்து உயிர் வகைகளின் தோற்றத்துக்கும் ஆதியாய் அமைந்த பொருள். அதனால் இதனை இறைப்பொருள் என சித்தர்கள் பெயரிட்டுள்ளனர்.

இப்பொருள் ஆலகாலம் போன்ற விஷத்தோடு வழக்கில் உள்ள பொருளாக இருந்து வருகிறது. இதன் விஷத்தை நீக்கி பயன்படுத்தாத காரணத்தினாலேயே நமக்கு நரை, திரை, பிணி, மூப்பு, சாக்காடு ஆகியன ஏற்படுகிறது.

இது குழந்தைகளின் விளையாட்டில் காணக்கூடிய எளிய பொருள். ஆயினும் இது வேலைக்காரர்களினால் கூட்டி எறியக்கூடிய எளிதானப் பொருள்.

இந்த மெய்ப்பொருள் ஒன்பத்தைந்து பாகை தலை நிமிர்ந்து, மண்மீது மதிப்பாரற்றுக் கிடக்கிறது. ஆண்களைவிட, அதிகம் பெண்களுக்குப் பயன் படக்கூடிய எளியப் பொருள்.

இப்பொருள் பணக்காரர்களுக்கு மட்டும் அல்ல, ஏழை எளியவர்களும் எளிதில் அணுகக்கூடிய அளவிலேதான் இறைவனால் படைக்கப்பட்டுள்ளது.

இது செத்தாலும் பிழைக்கும். ஆகவே செத்தாரையும் பிழைக்க வைக்கும்.

தன்னைப் பற்றிக் கூறிக்கொண்டே ஊரைச் சுற்றும் உன்னதப் பொருள். நமது இந்தப் பொருளானது ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, மற்றும் ஐந்து பொருள்களால் ஆக்கப்பட்டதாகும்.

ஐந்து என்பது அதனுடைய சொந்த கருப்பொருளாகிய விதை ஆகும்.

நான்கு என்பது நான்கு பூதங்கள் என அறியவும்.

மூன்று என்பது எல்லாப் பொருள்களின் மூன்று அடிப்படையன ரச, கந்தி, உப்பாகும்.

இரண்டு என்பது ரசப்பொருள்கள் இரு மடிப்பாக உள்ளன என்பதாகும்.

ஒன்று என்பது ஒவ்வொரு பொருளும் எந்த மூலத்திலிருந்து வந்ததோ அதைக் குறிக்கும்.

இது அனைவருக்கும் தெரிந்த பொருள் தான். ஆனால் இதுதான் என எல்லோராலும் எளிதாக அறிந்து கொள்வது இயலாது.

விதி உள்ளவன் அல்லது தெய்வீக மனிதன் மட்டுமே அதைப் பற்றி அறிந்துக் கொள்கிறான். முட்டாள்கள் அதைத் தூர வீசி எறிந்து விடுகிறார்கள்.

சித்த வைத்திய மாமேதை திரு கருணாகர சாமிகளும், '**துப்பறிய வெகு சுலபம் அறிவுல்லோர்க்கு**' என்றும், '**உலகிலே இது தெரியா மனிதரில்லை**' என்றும் கூறியிருக்கிறார்.

மேலும் அகத்தியர் கூறும் போது,

"**முப்பான முப்பூவும் ஆதியிலே குருவாய்**
**முடிந்திருக்கு என்றறியார் மூடர்தானே**"

"**முப்பூ முடித்து வைத்திருக்குதடா அதை**
**வைப்பு வைத்து திருத்தும் வழிதேடடா**"

என்றும் அமுதகலை ஞானம் - 1200 ல் அகத்தியர் கூறுகிறார். ஆகவே, அவர் கூறுவதுப் போன்று, மெய்ப் பொருளானது ஏற்கனவே முடித்து வைக்கப்பட்டுள்ளது.

"**பெட்டியதில் உலவாத பெரும் பொருள் ஒன்றுண்டு**" என்பதற்கினங்க அந்த மெய்ப்பொருள் ஒரு பெட்டியினுள் இறுக மூடப்பட்டு உலகோர் அறியா வண்ணம் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளது.

அது பளபளப்புடன் ஒளி வீசத்தக்க நிறம் உடையதாய் உள்ளது.

**"இறைவனின் பொக்கிஷம் மறைபொருளாய் வைத்திருந்தும் குழந்தை எடுத்தாடுவதேன்"**

"**குழந்தையுள்ளம் படைத்த இறை குழந்தைகட்கே சொந்தமதாம்**"

"**மழலைச் சொல் குழந்தைகட்கே அக்பரது பொக்கிடமாம்**"

"**குழந்தையும், தெய்வமும் கொண்டாடும் இடத்திருக்கும்**"

"**ஏட்டுச் சுரக்காய் என இங்கெடுத்து யாம் கூறோம் கூட்டுக் கறிக்காகுமிதால் குடும்பம் எல்லாம் பிழைத்திடுமே**". எனவும் கருணாகர சாமிகள் கூறுகிறார்.

**"மூலமென்ற வழலையது முப்பூவாச்சு**
**மூதண்டக் கருவதுவும் முடிந்த மூலி**
**காலனென்ற காலனுக்குமாதி மூலி**
**கண்டவர்க்கு மெளிதான கமல மூலி**
**பாலென்றால் பால் சொறியும் பஞ்ச மூலி**
**பரித்தெவரும் பொசிக்கின்ற பச்சை மூலி**
**ஞாலமிசை மெத்தவுண்டு நடன மூலி**
**நவின்றிட்டால் வெளியாகும் நயந்து பாரே" -** நந்தீசர்.

"**பஞ்சபூதம் ஒன்று கூடில் பளிங்கு போல் அதீதமாம்**" **-** திருவள்ளுவர்.

"**தானான ஆதார ஜோதி போல**
**சங்கையுடன் தோணுமடா அங்கே பாரு**
**வானான அண்டமதின் நடுவே பார்த்தால்**
**வகையாகத் தோணுமடா பஞ்சரூபம்**"

- அகத்தியர் அந்தரங்க தீட்சாவிதி.

எனவும் சித்தர்கள் அம்மெய்ப்பொருளை வெட்ட வெளிச்சமாய்க் காட்டி விட்டார்கள். மேலும், அப்பொருளானது, புனிதமானதாகவும், வணங்கத்தக்கதாகவும், பரந்தக்கடலைத் தன்னுள் கொண்டதாக உள்ளது.

"**வாதவைத்திய யோகமெல்லாம் ஆதியந்தம் இரண்டாலாம் காதமல்ல இவை கிடைக்கும் கண்டகண்ட இடங்களிலும்**" என்றும் கூறப்படுவதால் எங்கும் தேடி அலையவேண்டியதில்லை.

'**ஊரடுக்க மெத்தவுண்டு**' எனவும் அகத்தியர் கூறுவதால் அப்பொருள் எங்கும் உள்ள பொருள் என தெளிக.

"**குப்பங் காடு மலை சாக்கடை நகரமெலாம்**
**குடியிருக்கும் வீடு முதல் இது கிடக்கு**
**ஒப்பம் வைத்து ஊரெல்லாம்ஓடுது பார்**
**உலகிலே இது தெரியா மனிதரில்லை**"

"**இன்பத்துக்கும் துன்பத்துக்கும் இதுதானென்றும்**" என்று கூறியிருப்பதையும் கவனத்தில் கொள்க.

இயற்கை படைத்த பொருள்களுள் இப்பொருளைப் போல முதன்மை பெற்றதும், ஆழ்ந்த உண்மையுடையதுமான பொருள் வேறெதுவும் இல்லை. எளிதில் புரிந்து கொள்ள முடியாததும், ஆழங்காண முடியாததுமான மெய்ப்பொருளை நம் சித்தர் பெருமக்கள் போற்றிப் புகழ்கின்றனர்.

ஓ! இறைவனின் ஞானப் பொருளே, அதே இறைவன் உன்னுள் மிகுந்த சக்தியையும், ஆற்றலையும் ஒருங்கிணைத்து உயிர்ப் பொருள்களின் சக்திகளையும் பெற்று இருக்கின்ற ஏகவஸ்துவிலிருந்து உருவான உயிர் மருந்தே! அழியக்கூடிய மனிதனுக்கு, எண்ணிலடங்கா மதிப்பையும் சந்தோசத்தையும் வழங்கிய, அழிந்து போகக் கூடிய உலகப் பொருள்களுள் இணையில்லாத சக்தியைப் பெற்றிருக்கிற, வாய்விட்டுச் சொல்லக்கூடாத ஓ! பெரும்பொருளே!

மனித உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட இரகசியங்களின் இரகசியமே, மறைக்கப்பட்ட பொருள்களுள் முதன்மை பெற்ற பொருளே! எல்லா வியாதிகளையும் போக்குகிற ஓ மகா மருந்தே! பாராட்டத் தக்க அதிசயங்களைப் பெற்றிருக்கிற புனிதமான உயிர் மருந்தே!

எல்லாவித மகிழ்ச்சிகளையும், செழிப்பான வாழ்வையும் தருவதுவே! எல்லா கலைகளிலும் சிறந்த கலையே! உன்னை உபதேசமாக நான் பெற்றுக் கொண்டவுடன், புற உலகுக்குத் தேவையான எல்லா மகிழ்ச்சிகளையும் எனக்களித்த மெய்ப்பொருளே!

ஓ...எல்லோராலும் தேடப்படுகிற ஞானப்பொருளே, சந்திரனின் ஒளிவட்டத்திற்குக் கீழே படைக்கப்பட்டிருக்கிற எல்லாப் பொருள்களிலும் முதன்மையான பொருளே!

இயற்கையை பலப்படுத்துகிற பொருளே! மானிட இருதயத்தையும், உட்பகுதிகளையும் புதுப்பிக்கின்ற வஸ்துவே! இளமையைக்காக்கவும், முதுமையை விரட்டவும் கூடியதுமான, பலமின்மையை அழிப்பதுமான பொருளே!

ஓ....புனிதமான மூலப் பொருளே! அன்பான வான் பொருளே! உன்னுடைய அதிசய ஆற்றலால் எல்லா உலகுக்கும் சக்தியாய் நின்ற ஓ பரம்பொருளே! ஓ மறைவாய் இருக்கின்ற வல்லமையே, எல்லாவற்றிலும் உயர்ந்ததுவே, மனிதர்களின் அறியாமையால் புரிந்துகொள்ள முடியாத, எல்லோராலும் வெறுத்து ஒதுக்கித் தள்ளப்பட்டதுவே, இருந்தாலும் ஞானவான்களால் பெரும்பாடுபட்டு கண்டடையப் பெற்ற விலைமதிக்க முடியாத கௌரவம் மிக்க வெற்றியைத் தருகிற பொருளே!, இறந்தவர்களையும் நீ எழுப்புவாய்! என்று சொன்னால் மற்றவர் அதை நம்பாமல், கேலிக்கு ஆளாகும் பொருளே!

நோய்களை வெளியேற்றி இறப்பவர்களின் கூக்குரலைக் கேட்டு அவர்களைக் காக்கும் பொருளே! ஓ....புதையலுக்குப் புதையலே! இரகசியங்களுள் இரகசியமே!

இவ்வுலகத்தின் மிக உயர்ந்த ஆன்மிகப்பொருளே! உனக்கு நிகரான வேறு பொருளே இல்லை. ஆழங்காண முடியாத இயற்கைச் சக்தியே! செயல்பாடுகளிலும், வலிமையிலும் மிகச் சிறந்த பொருளே! உலகில்

படைக்கப்பட்ட எல்லாப் பொருள்களுக்கும் நிகராக விளங்குவதுவே! சொர்க்கத்தின் கீழே படைக்கப்பட்ட எல்லா உடல்களின் மூலச் சக்தியே! வியாதிகளை நீக்குகின்ற எண்ணெய்ப் பதமுள்ள தேனே! என்று இதன் பெருமையைப் பலவாறாகப் போற்றுகின்றனர்.

அத்துடன், இந்த அரிய மருந்து, தரம் தாழ்ந்த எல்லா உலோகங்களையும் தங்கமாக மாற்றக்கூடியது. சொர்க்கத்தில் உள்ள எந்தப் பொருளும் இந்த மருந்துக்கு நிகர் ஆகாது. இந்த உயிர் மருந்து இரகசியமானது. அது ஆரம்பத்திலிருந்தே மறைக்கப்பட்டு வருகிறது.

இருந்தாலும், எல்லாம் வல்ல இறைவனால் புனித மானிடர்கள் சிலருக்கு இம் மருந்து வெளிப்படுத்தப்பட்டது. பரமாத்மாவே இம் மருந்தாகும்.

இது தெய்வீகமானவர்களின் அன்பில்லாமலும், அவரின் வழி நடத்துதல் இல்லாமலும், அப் பொருளைப் பாடுபட்டுத் தேடிக் கண்டடைந்த ஞானிகளின் உபதேசம் இல்லாமலும், இவ்வுலகில் உள்ள எவரும் அப்பொருளைப் புரிந்துகொள்ள முடியாது.

அதன் அபரிமிதமான சக்திகளுக்காக அப்பொருளை அடைய இந்த உலகமே ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறது. அது கிரகங்களை வழிநடத்துகிறது. நல்ல ஆரோக்கியத்தை அளிக்கின்றது. அத்துடன் ஈடு, இணையில்லா செல்வங்களை அளிக்கிறது.

குஷ்டநோயாளியைக் குணப்படுத்துகிறது. பொதுவாக எல்லா நோய்களையும் குணமாக்குகிறது. மிகவும் நீண்ட செய்முறைகளின் மூலம் இந்த உயிர் மருந்தானது சித்தர்களால் கண்டுபிடிக்கப்பட்டது.

அந்த செய்முறைகளின் வழியாகவே அவர்கள் மருந்தை முடித்து அனைத்து செல்வங்களையும் அடைந்தனர்.

நமது மெய்ப்பொருள் உலகில் உள்ள மற்ற அனைத்துப் பொருட்களை விடவும் உயர்ந்தது. இவ்வுலகில் மனிதன் அடைய ஆசைப்படும் எல்லாப் பொருட்களும் அழியக் கூடியவை. எந்தப் பொருளையும் இம் மெய்ப்பொருளுடன் ஒப்பிட முடியாது. உண்மையானது இந்தப் பொருளில் மட்டுமே உள்ளது. எனவே அப்பொருள் '**கல்**' என்றும், உண்மைப் பொருளின் **சாராயம்** என்றும் அழைக்கப்பட்டது.

ஏனெனில், அப் பொருளின் நற்பண்புகளும், ஆக்கச் சக்திகளும் மனிதனின் எண்ணங்களுக்கு அப்பாற்பட்டு இருக்கிறது. அதைப் பற்றி மனிதர்கள் தங்கள் நாக்கின் மூலம் சொற்களால் வர்ணிக்க முடியாது. அப்பொருளினுள் ஏனைய எல்லாப் பொருள்களின் சக்திகளும் அடங்கியுள்ளன. ஆம்!, இயற்கை படைத்த பொருள்களுள் இப்பொருளைப் போல முதன்மை பெற்றதும், ஆழ்ந்த உண்மையுடையதுமான பொருள் வேறெதுவும் இல்லை.

இந்த ஞானத்தைப் பெற்றிருக்கிற யாரக இருந்தாலும், அவர்கள் இறைவனுக்குப் பயந்து வாழ்கின்றவர்களுக்கும்,

தூய்மையானவர்களுக்கும், ஒழுக்கமானவர்களுக்கும் மட்டுமே இந்த சாகாக்கலையை வெளிப்படுத்த வேண்டும்.

அன்பில்லாதவர்களுக்கும், பணிவில்லாதவர்களுக்கும், இரக்கமில்லாதவர்களுக்கும், அஹங்காரிகளுக்கும், சுய நலமாக வாழ்பவர்களுக்கும் இதைத் தெரிவிக்க வேண்டாம் என்பதே.

பலர் தேடினார்கள். சிலருக்குத்தான் இது கிடைத்தது. தூய்மை இல்லாதவர்களும், ஒழுக்க நெறியில் வாழாதவர்களும் இக்கலைக்குத் தகுதியானவர்கள் அல்ல.

இறைவனுக்குப் பிடித்தமான வாழ்க்கையை வாழ்ந்து கொண்டு இருப்பவர்களுக்கு மட்டும் இக்கலையைப் பற்றிக் கூற வேண்டும். ஏனென்றால், இந்த சாகாக்கலையை விலை கொடுத்து வாங்க முடியாதது.

மேலும், முட்டாள்கள் இக்கலையை அறிவது கடினம். ஏனென்றால் இயற்கையை இந்த அளவுக்குத் தேடுபவர்கள் அவர்களில் யாருமில்லை. இறைவனுக்குப் பயந்து வாழ்பவர்களுக்கு மட்டும் இக்கலையை வெளிப்படுத்த வேண்டும்.

உப்பு என்பது மெய்ப்பொருள் என்ற அண்டத்தில் இருந்து எடுக்கப்படும் பொருள். இது கனிம இனமாகவும், தாது வர்க்கமாகவும், பஞ்சபூத தத்துவமாகவும் உள்ளது. இவ்வுப்பை விட்டால் கற்பமும், வாதமும் சித்தியாகாது.

இந்த ஆதி உப்பைக் கட்டி வாதம் புரிவதற்கு ஏழு வகை தாதுக்கள் கொண்ட, வானவில்லின் நிறம் பெற்ற, பால் -

ஐ அறிய வேண்டும். இதன் மூலம் உப்பின் மாசுக்கள் எல்லாம் நீக்கப்படும் போது, சுத்தம் செய்யப்பட்ட நிலையில் மகரமாகக் (முப்பு) கிடைக்கிறது.

**"அப்பு உப்பு என்று சொல்லும் அறிய சூத சுத்த நீர்**
**இப்புவிச் சரக்குகட்கு ஏமனா யிருக்கையில்**
**வைப்பு வைத்த உப்பை விட்டு வல்லமைகள் பேசினால்**
**தப்புண்டாகும் பொய்மை இல்லை சயிலநீறிந்திடே"**
- என்றார் நாயனார்.

அகர, உகர உப்புக்களால் வடிக்கப்பட்ட திராவகத்தை, நெருப்பிற்கு ஓடக்கூடிய பாசாண சரக்குகளை கரி நெருப்பில் வைத்து, சுருக்குக் கொடுக்க நெருப்பிற்கு ஜெயித்து கட்டுப் பட்டு நெருப்புடன் நெருப்பாக இருக்கும். இதன் உண்மை உணராது மனம் போனவாறு செய்தால் தப்பு ஏற்பட்டு விடும் என்பது நாயனார் கருத்து.

இயற்கைத் தோற்றத்துள் மண்ணும், தண்ணீரும் மட்டும் கண்ணுக்குப் புலனாகிறது. அதே போல் அமுத கலசத்துள்ளும் அல்லது சித்தர் உலகத்துள்ளும் கோசபீசம் தண்ணீராகவும், மண்ணாகவும் கொள்ளப்படுகிறது.

இந்த மண்ணும் (உப்பு), தண்ணீருமே சிவமும், சக்தியாகவும், பெண்ணும் ஆணாகவும், காரசாரமாகவும் கருதப்படுகிறது. மண்ணில் நெருப்பு மறைந்து இருத்தல் போல, பிரணவ கலசத்துள்ளிருக்கும் ஆதிசேஷனாகிய சர்ப்பத்துள் நெருப்பாகிய அண்டக்கல் உப்பு மறைந்திருக்கிறது.

தண்ணீருடன் காற்று உறவாகிய தன்மையைப்போல் அமுதத்திலும் காற்று கூடி, இரண்டும் கட்டுப்பட்ட நிலையில் அமுத கலசத்துள் இருக்கிறது.

காற்றும் நெருப்பும் கண்ணுக்குத் தோன்றாதன. சிவத்தன்மையுடையது. மண்ணும், தண்ணீரும் கண்ணுக்குத் தோன்றுவன. சக்தியின் தன்மையுடையன.

சோமனாதியைப் பானையிலிட்டு எரித்து, பூரிக்கச்செய்து அதில் எழும் பாலாகிய சோம பானத்தை, அடியிலிருக்கும் சூரியனில் கலக்கி உறையச் செய்து எடுக்க, அவர் ஆலகால விஷத்தை உண்ட சிவபெருமானின் கிருபை படைத்தவராவார்.

தாய்மார்களுக்கு உடலில் உள்ள இரத்தத்தை பாலாக மாற்றி, அமுதமாக குழந்தைககு ஊற்றி உயிரை நிலை பெறச் செய்ய ஆண்டவர் விந்தை செய்து அருளுகிறார்.

அதைப்போன்றே, ஞானிகளின் இரத்தமானது வெண்மையான விந்தாக (பாலாக) மாறி, பிறகு அமுதமாக உருப்பெறுகிறது.

அது போன்றே உடல் முழுவதும் பால் உள்ள மரங்களே மனிதனின் வழிபாட்டில் முதன்மை பெறுகிறது.

வேப்ப மரத்தில் பால் வடிந்தால் இறை அம்சம் கொண்டு, அது முக்தி நிலை பெற்றதாக - வழிபாட்டிற்குறிய மரமாக - கொண்டாடப்படுகிறது.

பால் சுரப்பது விசேசம்.

அதுவும் சிரஞ்சீவியாக சிரத்தில் உயிர் ஜீவிக்க வேண்டும். அதில் பால் ஊறல் வரவேண்டும். அதுவே அமுத ஊற்று. பின்னர் உடல் எல்லாம் பாலாக மாற்றிட இறைநிலை பெறலாம் என்பதுவே முன்னோர்களின் வழிகாட்டல் ஆகும். அவ்வழியே நம்மை நீடூழி நெடுங்காலம் வாழவைக்கும், அத்துடன் என்றும் அழியாத சிரஞ்சீவியாக்கும். இதனை யாவரும் அறிந்து, பேரின்பமுற்று சிரஞ்சீவியாகவே வாழ வேண்டும் என்பதே சித்தர்கள் விருப்பம்.

## 7. குரு மருந்து செய்முறை

பூமியில் ஒரு விதை ஊன்றப்பட்டால் சூரியனின் வெப்பமும், பூமியின் வெப்பமும் சேர்ந்து 24 மணி நேரமும் ஒரு இதமான வெப்ப நிலையில் அந்த விதையானது இருக்கிறது.

மேலும், மழை பொழிவதன் மூலம் விதைக்கு ஒரு ஈரப்பதம் கிடைத்து, அந்த நீரை உண்டு வளர்ந்து மரமாகி, பிஞ்சாகி, காயாகி, கனியாகிறது. அந்தக் கனியை நாம் சுவைத்து மகிழ்கிறோம்.

இவ்வாறு, நமது இயற்கையான மெய்ப்பொருளும் ஒரு விதைப் பொருள் ஆகையினால், இயற்கையான முறையின் மூலம் மட்டுமே நமது பொருளானது வளர்ச்சி அடையும். வேறு எவ்வகையிலும் நமது விதையானது வளராது. செயற்கை முறையில் கட்டாயம் கனிகளைத் தராது.

ஆகவே நமது விதையை வளர்க்க இயற்கையைப் பின்பற்றி, இயற்கையின் வழியில் நின்று, அதை வளர்ப்பது மட்டும்தான், நாம் இயற்கையைப் புரிந்துக் கொண்டதற்குச் சமம்.

அதுவே, ஞானத்திற்கு முதல் படி. இதுவே சரியான வழி. ஆகவே இயற்கையை ஆராயுங்கள். இயற்கையை உணருங்கள். அவ்வாறு உணர்ந்து, புரிந்துக் கொண்டு, தெரிந்து கொண்டபின்பு நமது செய்முறையைத் தொடங்குங்கள்.

அதற்கு முன்பு ஒரு போதும் இந்த செய்முறையை செய்யாதீர்கள். செய்தீர்களேயானால், அதில் வெற்றி பெற முடியாது. அது, வீண் வேலையாகத்தான் முடியும்.

எனவே, இக்கலையை ஆய்வு செய்யும் சித்த மருத்துவர்களே, ஆராய்ச்சியாளர்களே, சாகாக்கல்வி கற்கின்ற மாணவர்களே, முதலில் நமது விதையை எது என்று சரியாகத் தேர்ந்தெடுப்பதில் கவனம் வையுங்கள்.

ஏனெனில், நமது மொத்த அறிவும் நம் விதையை தேர்தெடுப்பதில் தான் உள்ளது. நாம் விதையை சரியாக தேர்தெடுத்து விட்டால், அதன் பிறகு அதனை வளர்ப்பது மிகவும் எளிது.

அவ்வாறு வளர்த்து வருகின்ற விதையில், ஒரே ஒரு விதையில் இருந்துதான், நாம் நமது செய்முறையை செய்யவும் உள்ளோம். இரண்டு மற்றும் அதற்கு மேற்பட்டவைகளில் இருந்து அல்ல.

மூன்று பொருள்கள் எல்லாம் என்று குழப்பி விடுவது, தாங்கள் அதைக் கண்டறியக் கஷ்டப்பட வேண்டும் என்பதற்காக மட்டுமே.

ஒரே விதையிலேயே இந்த முப்பு முடிக்கத் தேவையான மூன்று பொருட்களும் உண்மையில் உள்ளன.

இந்த விதையை சுத்தி செய்து எடுத்துக் கொண்டு, நமது மருந்து செய்முறைக்கு ஒரு கண்ணாடிக் குடுவையை எடுத்துக் கொள்ள வேண்டும். அதனை சரியான முறையில் வேதிக்க வேண்டிய நெருப்புக்கு, தற்காலத்தில் கிடைக்கும் அறிவியல் ஆய்வகங்களில் பயன்படுத்தும் எலக்டிரிக்கல் மேண்டில் ஹீட்டரை உபயோகப்படுத்திக் கொள்ளலாம். அல்லது கேஸ் ஸ்டவ்வைப் பயன் படுத்திக் கொள்ளலாம்.

அதன் பிறகு, அந்த குடுவையில் மூன்று பொருட்களை போட்டு கொதிக்க வைக்கும் பொழுது, அந்த மெய்ப்பொருள் அந்த குடுவையிலேயே கரைகிறது, பதங்கமாகிறது, சுண்ணமாகிறது, காடியாகிறது, உறிஞ்சுகிறது, அனைத்தும் ஒன்றாக இணைகிறது.

இதை வாலையில் வடிக்கும் பொழுது, வெளிப்படும் பூநீரை எல்லோரும் ருசித்து பருகலாம். உலோகங்களை உருமாற்றலாம். படிக கற்களை வைரம் வைடூர்யமாக்கலாம்.

அத்துடன் இந்த மருந்தை வெறும் தண்ணீருடன் கலந்து, எண்ணையின்றி விளக்கு எரிக்கலாம். நோய்களைத் தீர்க்கலாம். மன அழுத்தத்தில் இருந்து விடுபட்டு ஆனந்தமான மனநிலை பெறலாம்.

மேலும் முதுமையையும் மரணத்தையும் வெல்லலாம். பிறவிப் பிணியைப் போக்கலாம். ஏழைக்கு அன்னமிடலாம். சகலத்திலும் வெற்றி பெற்று யாராலும் வெல்ல முடியாதபடி இருக்கலாம்.

இந்நிலையில் நமது **பூநீர்** எனப்படுகின்ற **அண்டக்கல்** குணமாக்கும் நோய்களை கணக்கிலேயே எடுத்துக் கொள்ள முடியாது. நமது சித்தர் பெருமக்கள் கூறுகின்ற 4448 நோய்களையும் இது குணமாக்கும் சக்தியுள்ள மகா மருந்து.

அப்பொருள் தன் முதல் நிலைத் தன்மையில் சுத்தம் இல்லாத மண் அம்சம் உள்ள உடலைப் பெற்றுள்ளது. அது முழுவதும் ஒழுங்கற்றதாக உள்ளது. மேலும் அது பூமியின் இயல்பைப் பெற்று அனைத்து நோய்களையும் நீக்கக் கூடியதாகவும், காயங்களையும், மனிதனுக்கு வரும் குடல் நோய்களை தீர்ப்பதாகவும், உடலில் குடிகொண்டுள்ள துர் நாற்றத்தை வெளியேற்றுவதாகவும் மற்றும் உடலின் அனைத்து அக, புற நோய்களை பொதுவாக நீக்கி குணம் செய்வதாகவும் உள்ளது.

அம் மருந்து தன் இரண்டாவது தயாரிப்பில் தண்ணீர் உடலுடன் தோற்றமளிக்கிறது. முதலில் இருந்ததைக் காட்டிலும் சிறிது அழகுடைய பொருளாகவும் இருக்கிறது. அதன் குணம் உயர்த்தப்பட்டுள்ளது. அது உண்மை நிலைக்கு சற்று அருகில் உள்ளது. குணமாக்குவதில் அதிக சக்தி உடையதாய் இருக்கிறது. இந்த வடிவத் தன்மையில் அம்மருந்து சளி மற்றும் சூட்டினால் வரும் அனைத்து காய்ச்சல்களையும் நீக்கும்.

மேலும், அது எல்லா விதமான விஷங்களையும் முறிப்பதில் முக்கியமான மருந்தாக இருக்கிறது. அது, அடிபட்டு, காயமடைந்தவர்களையும் குணமாக்குகிறது. இரத்தத்தை தூய்மைப்படுத்துகிறது. இதனை ஒரு நாளைக்கு மூன்று வேளை சாப்பிட்டு வர அனைத்து நோய்களையும் சிறப்பாக குணமாக்குகிறது.

அம்மருந்து தன் மூன்றாவது நிலையில் ஆவியாகக் கூடிய மிகவும் லேசான பொருளாகவும் எண்ணெய் வடிவம் கொண்டதாக உள்ளது. இதனைத்தான் **ஞானிகளின் பாதரசம்** எனவும், **மெர்க்குறி விடே** எனவும், **பாதரச உயிர்ச் சத்து** எனவும், **அமுரி** என்றும், **சாரநீர்** எனவும், பலபல பெயர்களில் நம் சித்தர் பெருமக்கள் குறிப்பர்.

இந்த மெய்ப்பொருளைக் கொண்டு, அந்த குரு மருந்து செய்ய வேண்டுமெனில், அந்த ஒற்றைப் பொருளை சிறு, சிறு பொடியாக நறுக்கிக் கொள்ள வேண்டும். அத்துடன், அந்த மெய்ப்பொருளில் உள்ள நீரையே விட்டு, அக்கலவையை நன்கு மூடிய ஒரு கண்ணாடிக் குடுவையில் இட்டு, மிதமான வெப்பத்தில் வைக்கவும். அதாவது, அதைக் கொதிக்க வைக்கும் பொழுது, அப்பொருள் தன்னைத் தானே உறைய வைத்துக் கொள்கிறது.

அதாவது, தன்னைத் தானே கரைத்துக் கொள்கிறது. அந்த கொதி நிலையில், எந்த இடையூறும் இல்லாமல், அந்த ஒரே கிழங்கில் இருந்து வெள்ளை மற்றும் சிவப்பு நிற அண்டக்கல் உருவாகிறது. அது தன்னைத் தானே கரைத்துக் கொள்கிறது. தானே புணர்ச்சியில் ஈடுபடுகிறது. வெண்மையாக

வளர்கிறது. மற்றும் சிவப்பாக வளர்கிறது. வெண்மையும் சிவப்பும் கலந்த நிறமாக உருவாகிறது. மேலும் தானே கருப்பு நிறமாகிறது. தானே திருமணம் செய்து கொள்கிறது. தானே கர்ப்பமாகிறது. தானே குழந்தைப் பெற்றுக் கொள்கிறது.

இவ்வாறு வெளிப்படும் வடி நீரானது, வெப்பத்தினால் மட்டுமே உருவாக்கப்படுகிறது.

சித்தர்கள் பெரும்பாலும் தந்திரமாக, மறைமுகமாக மட்டுமே குறிப்புகளைக் கூறுகின்றனர். அந்த குறிப்புகள் விடுகதைகள் போலவும், புதிர்கள் போலவும், உள்ளீடற்ற சொற்றொடர்களாகவும் கூறுகின்றனர்.

இதனாலேயே, அவர்களது சாகாக்கலை என்பது இன்று வரையிலும் எல்லோராலும் எளிதாகக் கண்டு பயன் பெற முடிவதில்லை. ஆனால், தகுதியான சாதகர்களுக்கு, தக்க சத்குருவினால் காட்டிக் கொடுக்கப்படுகின்றது.

இங்கு இந்த மருந்து செய்முறையில், அவர்கள் கூற வருவது என்னவெனில், கொதிக்கவைப்பது, ஒன்றாக கலப்பது, மற்றும் இணைப்பது, பதங்கமாக்குவது, சுடுவது, அரைப்பது, உறைவது, சமமாக்குவது, அழுகுவது, வெண்மையாக்குவது, சிவப்பாக்குவது, கருப்பாக்குவது என இந்த எல்லா செயலுமே ஒரே செயலைக் குறிப்பது தான். இவைகள் அனைத்துமே **கொதிக்க வைத்தல்** என்ற ஒரே செயலினால்தான் நடக்கிறது.

நமது வேதியியல் செய்முறைக்கு ஒழுங்கு படுத்தப்பட்ட தீயை கொடுக்கும் போது, மிக கவனமாகவும், பொறுமை யாகவும் வெப்பத்தைப் பயன்படுத்திச் கொதிக்க வைக்க

வேண்டும். ஏனெனில், சரியான வெப்பமே மிக முக்கியமான சாகாக் கலைக்கான மருந்தினை நமக்குக் கொடுக்கும்.

இதில், கரைதல், சுண்ணமாதல், நிறம் அடைதல், வெண்மையாதல், புதுப்பித்தல், குளித்தல், கழுவுதல், உறைதல், உறிஞ்சுதல், கொதிக்க வைத்தல், நிலைப்படுத்தல், அரைத்தல், உலர்த்தல், வாலைவடித்தல் இவை அனைத்தும் ஒன்றே. அந்த வகையிலே அந்த **"குரு மருந்து"** செய்யப்படுகின்றது.

மெய்ப்பொருளைக் கொண்டு இன்றைய நடைமுறையில் குருமருந்து செய்துமுறையைப் பார்க்கலாம்.

ஒரு, ஒரு லிட்டர் கண்ணாடி குடுவையில் நமது மெய்ப் பொருளை எடுத்துக் கொண்டு, அந்தக் குடுவையை காற்றுப் புகாதவாறு மூடியால் மென்மையாக மூடவும்.

அதன்பிறகு அந்தக் குடுவையை எலக்ட்ரிக்கல் ஹீட்டரில் அடியில் படாமல் வைத்து, அடிப்பகுதி சற்றே உயர்ந்திருக்குமாறு தூக்கி, ஒரு தாங்கியில் மாட்டி வைக்கவும்.

அதன்பின்பு ஹீட்டரை ஆன் செய்து, ஒரு குறிப்பிட்ட வெப்ப நிலையில் வைக்கவும். இந்த வெப்பமானது அதிக அளவும் இல்லாமல், குறைந்த அளவும் இல்லாமல் மிகவும் மிதமான அளவு மட்டும் இருக்கும் படி பார்த்துக் கொள்ள வேண்டும்.

அதாவது நமது மெய்ப்பொருளின் முக்கலவை நீரானது ஆவியாகிபின் மீண்டும் தண்ணீராகி கீழே இறங்கும் அளவு சரியான டிகிரி வெப்பநிலையில் இருக்க வேண்டும்.

குறைவான வெப்ப நிலையில் நீரானது ஆவியாக மாறாமல் நின்று விட்டால், நமது பொருள் எந்த மாற்றமும் அடையாது. அதற்கு மாறாக, அதிக அளவு வெப்பம் தந்தால், குடுவை வெடித்துச் சிதறி விடும். ஜாக்கிரதை!

எனவே சரியான வெப்பத்தில் நமது பொருளை வைத்தால் முதலில் குடுவையில் இருக்கும் காற்று வெப்பத்தால் விரிவடைந்து, வெளியேறி, அதன் பிறகு அந்தப் பொருளின் வாயிலாக வெப்பத்தில் வெளிப்படும் நீராவி மெதுவாக வாலை வழியே வர ஆரம்பிக்கும்.

உடனே மூடியானது வெளிக்காற்றின் அழுத்தத்தால் காற்று உட்புகாதவாறு உடனே மூடிக்கொள்ளும். இவ்வாறு பல முறை நடைபெறும்போது, சில நேரங்களில் மூடியானது இறுக மூடிக்கொள்வதும் உண்டு.

இதனால் காற்று வெளியேறமுடியாமல் போகும்.

இவ்வாறு நேர்ந்தால் குடுவை திடீரென வெடித்து விட ஏதுவாகும். எனவே கவனமுடன் அருகில் அமர்ந்து கொண்டு மூடியை சற்று தளர்த்தி விட, காற்று புஸ் என வெளியேறி விடும்.

சில நேரங்களில் மூடி தெறித்து கீழே விழுந்து விடும். அவ்வாறு விழுந்தால் மீண்டும் மூடியை எடுத்து மென்மையாக மூடவேண்டும். ஒரு கட்டத்தில் காற்று முழுவதும் வெளியேறிய பின்பு மூடியானது வெளிக்காற்றின் அழுத்தத்தால் தானகவே இறுக மூடிக் கொள்ளும். இதனை அறிந்து மூடியை மேலும் சற்று இறுக மூடிவிடவும்.

இதன் பிறகு குடுவையில் காற்றில்லா வெற்றிடத்தில் நமது மெய்ப்பொருள் தனது நிலைத் தன்மையில் சிறிது சிறிதாக வெப்பத்தினால் மாற ஆரம்பிக்கும்.

அதே சமயம் வாலையின் வாயிலாக ஆவியாகிய வடி நீர் மற்றொரு குடுவையில், சொட்டு, சொட்டாக விழ ஆரம்பிக்கும்.

இந்த நிலையில் நமது மெய்ப்பொருள் முதலில், பழுப்பு நிறத்திலும், பின் அடர்ந்த பிரவுன் நிறமாகி, பின் கட்டிகளாகவும் நீராகவும் பிரிந்து நிற்கும். இந்த நிலை மாற்றமானது 24 மணி நேரத்தில் நடைபெறும்.

இதிலே திடப்பொருள்களான கட்டிகள் குடுவையின் அடியிலும், நீர்மம் ஆகிய நீரானது அதன் மேலும் நிற்கும். இந்த கட்டிகள் பிரவுன் நிறத்திலிருந்து, படிப்படியாக கருஞ்சிவப்பாகி, பின் கருப்பு நிறத்திற்கு நிறமாற்றம் அடைய ஆரம்பிக்கும்.

இந்த கருப்பு நிறத்தையே ஞானிகள் அண்டங் காக்கையின் தலை என்றும், டிராகன் பாம்பின் தலை என்றும் உருவகமாக கூறுவர்.

இதில் மெய்பொருள் குடுவையில் இருந்து ஆவியாகி வெளியே வந்து, சொட்டு, சொட்டாகக் கொட்டிய நீர் மட்டுமே நமக்குத் தேவையான "**பூநீர்**" எனப்படுகின்றது. அதுவே, முப்பு என்றும் அழைக்கப்படுகின்றது.

முதற் குடுவையில் உள்ள மெய்ப்பொருள் திரவ நிலையிலிருந்து, திட நிலைக்கு வந்து கட்டியாக மாறி விடும். கட்டியான பொருள் பெண்ணாகவும், தண்ணீர் ஆணாகவும் கொள்ளப்படும். ஆண் பொருள் ஆவியாககூடியது. பெண் பொருள் நிலையானது.

தண்ணீரே ரசம் என்றும் ஈரம் என்றும் ஆவி என்றும் **ஆன்மா** என்றும் கூறப்படும். பெண் பொருள் விதை என்றும், கல் என்றும், கந்தி என்றும், **உடல்** என்றும் கூறப்படும்.

காரசாரம் எனப்படும் இவைகளை ஒரு பொருளில் இருந்து மட்டுமே எடுத்து பயன் படுத்த வேண்டுமேயன்றி வேறுவேறு தனித்தனி பொருள்களில் இருந்து அல்ல.

## 8. உயிரும், உடலும் ஒன்றானால்!

"**நீரின்றி அமையாது உலகெனின் யார்யார்க்கும்**

**வான் இன்று அமையாது ஒழுக்கு.**" - குறள்

உலகில் வாழ நீர் அவசியம். அவ்வாறே, வான் இன்றேல் ஒழுக்கம் அமையாது என்பதினால், நீர், அப்பு என அவர்கள் குறிக்கும் பொருளுக்கு ஆதிப்பொருளான **வான்** என்ற **விண்** மட்டுமே காரணமாக உள்ளது என்றும் கூறுவர்.

விண்ணிலிருந்து வரும் அப்பொருளே, ஒருவனை மெய் ஞானியாக மாற்றுவதும், ஒழுக்கமுடையவனாக உலகிற்கு வழி காட்ட வைப்பதும் என எல்லாவற்றிற்கும் காரணமாக உள்ளது.

விண்ணில் இருந்து பெறப்படும் அப்பொருள் "**நீர்**" தன்மைக் கொண்டது.

"**சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமெனும்**
**ஐந்தின் வகை தெளிவான் கட்டே உலகு.**" - தொல்காப்பியம்.

ஐம் பூதங்களின் வகை தெரிதல் என்ன?

அவைகள் பொறிகள் வழியாக இழுக்கப்பட்ட மனதை ஆட்டுவிக்கும். இந்த உண்மையை அறிந்தவர், அவைகளை அடக்கவும் வழியை அறிந்துக் கொள்ள வேண்டும்.

அதற்கு சித்தர் பெருமக்கள் கூறிய ஐம்பூதம் அடங்கிய பொருள் தெரிதல் வேண்டும். அந்த ஐம்பூதமே உடலாகி வருவது. எனவே அதனை அறிந்து, அந்த ஐந்தை அவித்தல் செய்தால் உலகின் அடிப்படை உண்மை அறியலாம் என்பது சித்தர்வாக்கு. இந்த உண்மை உலகில் உள்ள மற்றவர்களுக்குத் தெரியாது.

"**நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும்.**" - குறள்

விண், மண் என்றும் அடி, முடி என்றும் கூறியவற்றில் நிலம் என்பது மண்ணாகும். அதனை **அகரம்** என்பர் சித்தர்

பெருமக்கள். அதில் தான் அவர்கள் கூறும் மெய்ப்பொருள் மறைந்துள்ளது.

அதனால், நிறைமொழி பெற்ற சான்றோர்களின் பெருமை அவர்கள் மறைமொழி என்ற மறைப்பாகிய அந்த பூமியை அறிந்துள்ளனர் என்பது கருத்து.

**"பஞ்சபூதம் ஒன்று கூடிப் பார்தனில் படிந்துமே**
**மஞ்சுலாவு வாசியோக வாழ்வினுக்கு ளாதியாய்**
**விஞ்சியே படர்ந்த மூலி வேதையிதற்கு மேகுமே**
**வஞ்சமு மறைப்புமில்லை வழலையின்றன் போக்கிதே."**

- பஞ்சரத்தினம்.

இதிலே பார் என்றால் பூமி. அதில் உள்ளது ஐம்பூதங்கள். அவைகள் முறையே, **மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம்** என்பன.

இங்கே மண் என்பதும் பூமி என்பதும் அகரத்தில் உள்ள மண் பூதம் எனப்படுகின்றது. அது நாம் வாழும் இந்த பூமி அல்ல.

சித்தர்கள் கூறிய பூநீர் மேற்படி அகரமாகிய பூமியிலிருந்து வருவது. நாம் வாழும் பூமியிலிருந்து வரும் பூநீர் அல்ல.

**"புத்தியில்லா பாவிகள் தான் பூநீர் வாங்கி**
**பூமி தண்ணிரால் கலக்கி வெளியில் வைத்து**
**சித்தமது தான் கலங்கி முப்பூவென்றும்**
**சிறந்த சரக்கத்தனையும் சுட்டுப் பார்த்து**

**பித்தமது தான் பிடித்து நோயால் மாய்ந்து**
**பிணமாகிச் சுடுகாடு போனார் தானே.,"**

- அகத்தியர் அந்தரங்க தீட்சாவிதி.

முப்பு என்பதில் மூன்று பொருள்கள் உள்ளது. அவைகள் வாயு, நீர், நெருப்பு எனப்படுகின்றது. இவைகள் மூன்றும் ஒன்றாகக் கலக்க வேண்டும். அதுவே முப்பு ஆகும்.

அதாவது, அகரம் (அ) என்பது 8 எனப்படுகின்றது. உகரம் (உ) என்பது 2 எனப்படுகின்றது.

இதிலே அ+உ=10. 8+2=10; என இரண்டு பொருளால் மூன்றாம் பொருள் கிட்டுகின்றது. இதுதான் ஃபார்முலா. அதாவது, சூத்திரம்.

அ என்பது ஆண், உ என்பது பெண். இவர்கள் இருவரும் சேரச் சிற்றின்பம் சிறிது நேரம் உள்ளது. இதேப்போன்று, யோக நிலையிலும் அனுபவமாக உணரப் படுகின்றது. ஆனால், அதில் இன்பம் அதிக நேரம் நீடிக்கின்றது என்பதினால் அதனை பேரின்பம் என்கின்றோம்.

மணிவாசகப்பெருமானின் திருவாசகத்தின் ஒவ்வொரு சொற்றொடரும் பல மெய்யியல் கருத்துகளை மிக நுட்பமாக விளக்குபவை.

அத்தகைய சொற்றொடர்களுள் ஒன்றுதான் "எட்டும் இரண்டும்'!

அதற்கான விளக்கத்தைக் காண்போம்.

எட்டும் இரண்டும் அறியாதவனாக இருந்த என்னை ஆன்றோர் ஆய்வு செய்யும் சயமவாத சபையில் - பட்டிமண்டபத்தில் ஏற்றினை ஏற்றினை என இறைவனின் திருவருளை மணிவாசகப் பெருமான் இரண்டு முறை வியந்துகூறி, தன்னால் அவனுக்குக் கைம்மாறு செய்ய முடியாததற்காக வருந்துகிறார்.

<u>அப்பாடல் வருமாறு:</u>

**"கட்ட றுத்தெனை ஆண்டு கண்ணார நீறு**
**இட்ட அன்பரொடு யாவரும் காணவே**
**பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை**
**எட்டினோடு இரண்டும் அறியேனையே"**

(திரு.திருச்சதகம்-5; கைம்மாறு கொடுத்தல், பா.49)

இப்பாடலில் அவர் குறிப்பிடும் அந்த எட்டும் இரண்டும் எவை?

<u>சுவாமி சித்பவானந்தர் தரும் விளக்கம் வருமாறு:</u>

"அஷ்டமூர்த்தி தத்துவத்தையும் அர்த்தநாரீசுவரர் தத்துவத்தையும் அறிந்து கொள்ளாத எனது பாசத்தளையைக் களைந்து என்னை ஆட்கொண்டாய்.

சக்திக்கும் சிவத்துக்கும் புறம்பாகப் பிரபஞ்சமில்லை.

எட்டு என்னும் சொல் அஷ்டமூர்த்தியைக் குறிக்கிறது.

நிலம், நீர், நெருப்பு, வாயு, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய எட்டு ஜடவஸ்துக்களும் ஈசனுடைய சொரூபங்களாகும்.

பிருகிருதி - புருஷன் அல்லது சிவம் - சக்தி ஆகிய இரண்டு தத்துவங்களின் கூட்டுறவு அர்த்தநாரீசுவரன் எனப்படுகிறது.

உடல் அம்பிகையின் சொரூபம், உயிர் சிவசொரூபம்.

இவை இரண்டும் பிரிந்தால் வாழ்வு நடைபெறாது.

சிவ சொரூபத்தில், அந்த எட்டும், இரண்டும் மிக ஸ்தூல நிலையில் இருக்கின்றன. இவைகளை அறியாதவன் அவனுடைய (இறைவனுடைய) சூக்ஷ்ம நிலை, காரண நிலை, அதீத நிலை, அகண்ட நிலை ஆகியவைகளை அறிவது எங்ஙனம்?" என்கின்றார்.

"**முப்பொருளாய் நின்றிலங்கும் மதியே விந்து**"

மதி - சந்திரன் - பெண். அதில் மூன்று பொருள் உள்ளது. அதுவே விந்துவுமாம்.

பிரணவம் என்பது நாத, விந்துகளாலானது.

இது **ஒலியும், ஒளியும்** உடைய பரம்பொருள்.

**அகர, உகர, மகரம்** சேர்ந்ததே “ஓம்”. இதுவே **பிணவம்.** இது மனித தேகத்தில் நாத, விந்துக்களாக உள்ளது.

இதுவே **சக்தி - சிவம்** எனப்படும்.

இந்த ஒலி / ஒளி சொரூபத்தை (நாத - விந்து) "**நாத விந்துக் கலாதீ நமோநம**" என்று அருணகிரிநாதரும், "**விந்துவும் நாதமும் மேவி யுடன்கூடிச் / சந்திர னோடே தலைப்படு மாயிடில்**" (961) என்று திருமூலரும், "**விந்தோ நாத வெளியுங் கடந்து மேலு நீளுதே**" (மெய்யருள் வியப்பு - 5019) என்று வள்ளலாரும் பாடியுள்ளனர்.

**"பூருவத்தில் உதித்த கடல் கல்லுப்பும்**
**பூநீரின் உப்பும் அமுரி உப்பும்**
**வாரறிந்த முப்பொருளும் மூன்றுப்பாகும்,"**

இதனையே,

**"என்னவே வானத்திடியினி லொன்று**
**கன்னியமான கடல்தனில் ஒன்று**
**பொன்னெனப் பூத்த பூமியிலொன்று**
**முன்னவர் சொன்ன முப்பு இம்மூன்றே,"**

உலகம் தோன்றுவது எதில், ஒடுங்குவது எதில். அதில் அதன் விதி முறை பற்றிச் சித்தர்கள் அறிந்தனர். அந்த ஆதி நிலையும் **அ,** உ என்பர்.

தோற்றமாகி வந்த பின் பஞ்சபூத நிலைகளில் மூலப் பொருளும் **அ,** உ என்பர்.

உயிர்களின் தோற்றமானால், அதற்கும் முதற் பொருள் **அ,** உ என்பர்.

இந்த இருபொருளும் ஒன்றிலிருந்து தோன்றியது.

உடலில் விந்து, நாதம் என்பதும்,

**ஆண் - பெண்** என்பதை விந்து, நாதம் என்றும், **சூரியர் - சந்திரர்** என்பதை விந்து, நாதம் என்றும், **மின்னல் - இடி** என்பதை விந்து, நாதம் என்றும், **அப்பும் - உப்பும்** என்பதை விந்து, நாதம் என்றும், இடம், பொருள் கண்டு கூறிச் செல்வர்.

இந்தப் பொருளை **வாலை** என்றும், **கற்பம்** என்றும், **முப்பு** என்றும் கூறுவர்.

உடல் உருவம் ஆகும் முன் புல் நுனியில் பனித்துளி போல் இருந்தது விந்து. நாதம் அது சூட்சும நிலை. ஒவ்வொரு விதையும் தன்னுள் இப்படித்தான் உள்ளது.

இப்பொருளைக் கொண்டு மருந்து செய்து மனம் அடங்கி அஷ்டசித்தி பெற்றவர்கள் சித்தர் பெருமக்கள்.

"**சத்தாகி என் சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே**" என்பது தாயுமானவர் வாக்கு.

இங்கு சித் - அறிவு எனப்படுகிறது. சத்-சித்-ஆனந்தம் என்ற போது சித் என்ற ஒரே பொருள் மூன்று நிலையில் உள்ளது.

**"எத்துனையுந் தாம் பேதமுறா**
**தெவ்வுயிரும் தம்முயிர் போல்உள்ளே**
**ஒத்துரிமை உடையார் யாவர்**
**அவருள்ளந்தான் சுத்த**
**சித்துருவாய் எம்பெருமான்**
**நடம் புரியும் இடம்..."**

இறைவனைச் சித்துரு என்கிறார்.

"**சித்தான பஞ்சவர்கள் ஒடுங்கும் போது**" காகபுசுண்டர் காவியம். இங்கே பஞ்சபூதம் சித்து எனக் குறிக்கின்றார்.

"**சிவமான தேகமது மந்திர சித்தாச்சே,**" அகத்தியர்.

தேகம் - சித்து என்கின்றார் அகத்தியர்.

சித்து என்பது இறைவனைக் குறிப்பது. அதாவது, அறிவாகிய இறைவன் உடலிலும் உள்ளார் என்பதனை அறிந்து, அதனுடன் ஒன்றாக இணைத்தால் முக்தி.

உடல் எது?

"**உடலிற் கிடந்த வுறுதிக் குழநீர்க்**
**கடலில் சிறுகிணற் றேற்ற மிட்டாலொக்கும்**
**உடலில் ஒருவழி ஒன்றுக்கிரைக்கில்**
**நடலைப் படாதுயிர் நாடலுமாமே**"

**"கரையருகே நின்ற கானல் உவரினை**
**வரைவரை என்பர் மதியிலா மாந்தர்**
**நுரை திரை நீக்கி நுகர வல்லார்க்கு**
**நரை திரை மாறு நமனங்கில்லையே"**

அமுரி தாரணை என்ற தலைப்பில் கூறப்பட்டுள்ள பாடல் இது. இதனை உண்டால் மரணமில்லாப் பெருவாழ்வு.

அவர்கள் கூறும் அகார, உகாரம் எனும் பொருள் எங்குள்ளது. அது உடலில் உள்ளது.

இதில் எது உடல்?

**"சித்தியென்ன பத்தாகு மாதமப்பா," -** அகத்தியர்.

**"மாதம் பத்தானால் விளைவுமாச்சு**
**மண்ணிலே வந்தவுடன் பசளையாச்சு,"**

பத்துமாதம் என்பது கற்பம். அது பிண்டம். மண் என்பது கருத்து. பசளை என்பது குழந்தை. அ+உ=8+2=10 குழந்தையும் பத்து மாதம். ஆகவே குழந்தை. பசளை என்பர்.

**"கண்டுனர்வோர்க் கெய்தும்**
**நாத விந்துற்பத்தி காயத்திலே,"**

ஆகவே, உடல் என்பது மனித உடல் அல்ல.

சித்தியாவது வெற்றி என்ற பொருளுடையது. மனதில் இறைவன் உள்ளான். மனம் அடங்காது. அதை அடக்கக் கண்ட குறுக்கு வழி கற்பம்.

மனம் எங்கு உதித்ததோ அங்கு ஒடுங்கும். அதனைச் சித்தர்கள் உணர்ந்தனர். அப்பொருளை அறிந்தனர். அதனைக் கொண்டு சாதனை செய்தனர். வெற்றி பெற்றனர்.

மனம் விரியும் போது சுவாசத் தொடர்பு உண்டாகிறது. ஒரு நாளின் சராசரி மூச்சு 21,600 ஆகும். சுவாசம் குறையும் போது மனம் அடங்கும். இதனை வாசியோகம், பிராணாயாமம் என்று குறிப்பிட்டாலும் உலகம் கொள்ளும் உண்மைப் பொருள் அதுவல்ல எனக் கூறி உள்ளனர்.

அதாவது மூக்கு வழியில் மூச்சை இழுத்து, நிறுத்தி ஒரு துளையிலிருந்து மறு துளையில் விடுவது உலகக் கருத்து. இதனை சித்தர்கள் மறுத்துள்ளனர்.

அவ்வாறே, உலோகத்தை அதன் உண்மைத் தன்மையிலிருந்து பிரித்து, மற்றொரு தன்மைக்கு மாற்றும் வித்தையை "**இரசவாதம்**" என்கின்றோம். இந்த முறையில் இரும்பைத் தங்கமாக்க முடியும் என்ற ஆர்வத்தில் அனேகரும் இந்தக் கலையைக் கற்க முயல்வதால், அது அவர்களுக்கு சித்தியாவதில்லை.

வள்ளலாரின் வாழ்க்கைச் சம்பவம் மூலம் '**இரசவாதம்**' என்பது எல்லோருக்குமானதல்ல. தங்கத்தின் மீதான ஆசைகள் ஒழித்தவருக்கே, அது கைகூடும் என்பது புலனாகிறது.

இது இந்தியாவில் மட்டுமல்ல; பழங்காலத்தில் கிரீஸ், சைனா, எகிப்து மற்றும் அரேபியா போன்ற நாடுகளில் இவ்வகை ஆராய்ச்சிகளை மேற்கொண்டு வெற்றிக்காண முயன்று அனைவருமே தோல்வியைத் தழுவினர் எனலாம்.

திருமூலரும் தமது திருமந்திரத்தில்,

**“செம்பு பொன்னாகும் சிவாய நமவென்னில்**
**செம்பு பொன்னாகத் திரண்டது சிற்பரம்**
**செம்பு பொன்னாகும் சிரீயும் கிரீயுமெனச்**
**செம்பு பொன்னான திருவம் பலமே**” என்கிறார்.

அவர் கூற வருகின்ற இரசவாதம் நமது உடலிலும், உள்ளத்திலும் நடைப்பெற வேண்டிய ஒன்று.

1403 ஆம் ஆண்டில் இங்கிலாந்தின் ஐந்தாம் ஹென்றி, இந்த இரசவாதப் பயிற்சியை தடைசெய்தார். அப்பயிற்சிகளை மேற்கொண்டோர் கடுமையாக தண்டிக்கப்பட்டனர். அதற்குக் காரணம் தங்கத்தின் மீதுள்ள ஆசையினால் இவர்கள் அனேக அக்கிரமங்களை செய்தனர்.

அதன்பிறகு, இரண்டாம் ருடால்ஃப் 16 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பெரு நகரில் உள்ள தன்னுடைய அரண்மனையில் பல்வேறு இரசவாதிகளை வர வழைத்து, அவர்களை சோதனைகள் செய்ய வைத்து, அவர்களது பணிக்காக பல்வேறு பரிசுகளை அளித்து கௌரவித்திருக்கிறார்.

இரசவாதம் என்பது சாதாரண உலோகங்களை மதிப்புமிக்க உலோகமாக மாற்றச் செய்கின்ற ஒரு முயற்சி. அதனைக் கொண்டு இரும்பைத் தங்கமாக ஆக்கும் ஆசையில் அனைவரும் இருப்பதினால், அது பல்வேறு ஆபத்துக்களுக்கு வழிவகுக்கும் என்பதால் உலகெங்கும் அது வெளிப்படையாக நிகழவில்லை.

விஞ்ஞானிகளும் எல்லா பொருட்களும் அணுக்களால் ஆனவை. அந்த அணுக்களின் மூலக் கூறுகளின் அமைப்பை மாற்றியமைப்பதனால் ஒரு பொருளை மற்றொரு பொருளாக மாற்ற முடியும் என்பது உண்மைதான். ஆனால் இரும்பை அந்த முறையில் தங்கமாக மாற்றுதல் சாத்தியமில்லை என்கின்றனர்.

ஆனால் பாதரசம், காரீயம், பிளாட்டினம், வெள்ளி ஆகியவற்றின் அணுத் தொகுப்பை, மூலக்கூறு அணுவை, அணுச்சிதைவு மூலம் மாற்றியமைத்துத் தங்கமாக்கலாம் என்ற ஒரு கருத்து கூறப்படுகிறது. ஆனால் அதுவும் சாத்தியமில்லை. அவ்வாறு தங்கம் செய்வதற்கு பல ஆண்டுகால மனித உழைப்பு விரயமாவதுடன், பலகோடி டாலர்கள் செலவிட வேண்டிவரும் என்றும் விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

அக்காலத்தில் பாதரசம் இந்தச் செயல்பாட்டில் மிக முக்கிய பங்கு வகித்ததாலேயே இக்கலையை தமிழில் '**இரசவாதம்**' என்று அழைத்தனர். நீர்ம வடிவத்தில் இருக்கும் பாதரசத்தை திடப்பொருளாக்கும் கலையிலும் அக்காலச் சித்தர்கள் தேர்ச்சி பெற்றிருந்தனர். அவற்றை லிங்க உருவாக்கி வழிபட்டனர். பல ஆலயங்களிலும் மக்கள் வழிபாட்டிற்காக ஸ்தாபித்தனர்.

இரும்பை முதலில் செம்பாக மாற்றுதல். பின்னர் செம்பை தங்கமாக மாற்றுதல் என்று இருகூறுகளை உடையதாக இரசவாதக் கலைப் பயிற்சிகள் அக்காலத்தில் இருந்ததாகத் தெரிகிறது.

வெள்ளியை தங்கமாக மாற்றும் முறைகளையும் ஆய்வு செய்திருந்தனர். ஆனால் அதற்கான வழிமுறைகளை அவர்கள் இரகசியமாகவே வைத்திருந்தனர். சித்தர்களின் பழங்கால ஓலைச்சுவடிகளிலும், பழங்கால வேத நூல்களிலும் இரசவாதம் பற்றிய குறிப்புகள் காணக் கிடைக்கின்றன.

பொதுவாக, மனிதனின் மிதமிஞ்சிய ஆசைகளே அவனது பெரும்பாலான துன்பத்திற்குக் காரணம் என்பதை என்று அறிகின்றானோ, அன்று மட்டும்தான் அவன் உண்மையான ஆனந்தம் என்பது என்னவென்றே அறிவான்.

]அந்த ஆனந்தம் வெளியே கிடைக்காது, அனைத்து சீவர்களிடமும் மறைபொருளாக மறைந்துள்ளது என்பதினால், அதை நாம் நமக்குள்தான் தேடவேண்டும் என்பதை அறிந்துக் கொண்டவனுக்கு, இதுவரை அறிந்துக் கொண்ட அனைத்துமே, பொருளற்றவையாகி விடுகின்றன.

மறை என்பது தொழிற் பெயர்.

மறைத்துவை என்பது பொருள்.

தகுதியில்லாதவர்களுக்கு அதை அறிவிக்கக்கூடாது என்றே சித்தர்கள் எச்சரிக்கை செய்கின்றனர். தகுதியானவர்கள் யாரோ, அவர்களே அதை அறிவார்கள். அவ்வாறு அறிந்த பின்பு, அதை தகுதியில்லாதவர்களுக்கு வெளிப்படுத்துதல் என்பது, இந்த உலகத்து சீவர்களுக்கு இடையூராக முடியும்.

எனவே, அதை மறைத்து விடு. அதனால்தான் சித்தர் பெருமக்கள் கூறியது யாவும் குறிப்புப் பொருளாகவே உள்ளன. அதாவது, பரிபாஷைகளாகவே உள்ளன.

"**யோகிக் காகும் உடற் குறிக் கற்பம்**
**போகிக்காகாப் பொருள் சித்தியில்லை காண்.**"

உலக ஆசைகளில் உலழும் உலகினர்க்கு அது உதவாது. காரணம், அவர்கள் தோற்றத்தில் மனிதர்களாகக் காணப்படினும், உள்ளத்தால் அவர்கள் காமுகர்களாகவே இருக்கின்றனர்.

'**சிவயோகி பார்த்தால் சித்தியாகும்.**
**அவயோகி பார்த்தால் அழிந்தே போகும்**'

'**பற்றற்றுப் பார்க்கும் பரம யோகிக்கே அல்லால் மற்றையோர்**
**உற்றுற்றுப் பார்த்தாலும் உணர்வு தோன்றாது.**'

ஆகவே உணர்ந்தோர் மட்டுமே, அதை அறிவார்கள். அவ்வாறு அறிந்தவர்கள் அதை மறைப்பது நன்று.

நன்று! நன்று! நன்று!

**ஓம் தத் சத்!**

# ஞானியின் கல்



சுவாமி பிரபஞ்சநாதன்



சி.எம்.ரங்கராஜ்.
பாரம்பரிய சித்த வைத்தியர்

இது பஞ்சபூதங்களும் சேர்த்து கட்டப்பட்ட உருண்டை வடிவம் கொண்டது. அதன் மேல் தோலின் நிறம் வானவில் போன்று பல நிறங்களைக் கொண்டது. என்றும் ரசாயன மாறுபாடுகளுக்கு உட்படாதது.

குழந்தைகள் எடுத்து விளையாடக் கூடியது, அதே சமயம் பூசைகளில் பயன்படக்கூடியது, எனினும் வேலையாட்களால் கூட்டிப் பெருக்கும் சாதாரணத் தோற்றம் கொண்டது.

தோல் நீக்கினால் தொடுவதற்கு மிருதுவானது, இனிப்பான சுவையுடையது, தண்ணீரைப் போன்று வழிந்து ஓடக் கூடியது, மோட்சத்திற்குரியது என்றும், நம் நாட்டு சித்தர்களும் மேல் நாட்டு சித்தர்களும் ஒன்று போலவே ஒப்பக் கூறுகின்றனர்.